6th March 1963]

MR. CHAIRMAN : The question is—

"That in pursuance of sub-section (1) of section 4 of the Madras Panchayats Act, 1958 (Madras Act XXXV of 1958), the House do resolve that the Valparai Panchayat comprising the Anamalai Hills revenue village in the Coimbatore District which is an industrial colony, be declared to be a township."

The Resolution was put and carried.

III.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR 1963-64—*cont.*

MR. CHAIRMAN : Now we shall continue the discussion on the Budget for 1963-64. Dr. A. Chidambaranathan will now speak.

*** டாக்டர் அ. சிதம்பரநாதன்:** தலைவர் அவர்களே, 1963-64 ஆண்டுக்கு உரிய வரவு செலவுத் திட்டம் நம்முன் வைக்கப் பட்டிருப்பதிலே ஆளும் கட்சியின் தலைவர் அவர்கள் 2.74 கோடி ரூபாய் ஆண்டு இறுதியில் பற்றுக்குறை ஏற்படும் என்று காட்டி யிருக்கிறார். ஆனால் கூடுதலாக நாம் சென்ற ஆண்டில் விதித் திருக்கிற மோட்டார் வாகன வரியும், மின்சார வரிகளும் அதிகமாக இந்த ஆண்டு முதல் பலன் தரும் என்று எதிர்பார்க்கப் படுகின்ற காரணத்தாலேயும், இந்த ஆண்டில் வரி விதிக்க ஒப்புக் கொண்டிருக்கின்ற நீர் வரி காரணமாகவும், அடுத்த ஆண்டில் விதிப்பதற்கு உருவாகிக்கொண்டிருக்கின்ற நகர் நிலவரி மசோதா (Urban Land Tax Bill) வழியாகவும் நிறைய பணம் கிடைக்கும் என்று நான் எதிர்பார்க்கிறேன் ஆனதால், உண்மையிலேயே கடைசியில் கணக்கு பார்க்கிறபோது, உபரி இருக்குமே தவிர துண்டு விழாது என்பது என்னுடைய அழுத்தமான நம்பிக்கை. பழைய வரிச் சுமைகளும், இந்திய அரசாங்கம் இதற்கு முன்னால் சுமத்திய சுமைகள் போதாது என்று இப்பொழுது சுமத்தி இருக்கிற சுமைகளும் தாங்காமல் மக்கள் திணறிக் கொண்டும், திகைத்துக் கொண்டும் இருக்கிறபோது, புது வரி இந்த ஆண்டில் விதிக்கப்படவில்லை என்பது என்போன்றவர்களுக்கு முழு திருப்தி அளிக்காது. இந்த அரசாங்கம் இந்த ஆண்டு புது வரி போடவில்லை என்பது ஓரளவு அமைதி தந்தாலும் இன்னொரு பக்கம் அது முழு திருப்தி அளிக்காது என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 3-10 p.m.

1961-ம் ஆண்டு மார்ச் 10-ம் தேதி இதே மன்றத்தில் வரவு செலவுத் திட்டம் பற்றி பேசியபோது, நான் சொல்லிய சில செய்திகள் விற்பனை வரித்துறை அமைச்சர் அவர்களுக்கு நன்றாக நினைவு இருக்கலாம். அப்பொழுது எடுத்துக் காட்டினேன்; 1958-59-ல் நாம் ஒரு கோடியே 35 லட்சம் ரூபாய் உபரியாகப் பொது விற்பனை வரி காரணமாக வசூலித்திருக்கிறோம் என்று. 1959-60-ல் ஒரு கோடியே இருபத்து ஐந்து லட்சம் ரூபாய் உபரி யாக, எதிர்பார்த்ததற்கு மேல் வசூலாகி உள்ளது. 1960-61-ல் இரண்டு கோடியே 14 லட்சம் ரூபாய் எதிர்பார்த்ததற்கு மேல் பொது விற்பனை வரி காரணமாக வசூலாகி இருக்கிறது. 1961-62-ல் கணக்கு முடிந்த இந்த ஆண்டில், விபரம் கிடைக்கப்பெற்று இருக் கிறோம்; ஒரு கோடியே 79 லட்சம் ரூபாய் கூடுதலாக, நாம் எதிர் பார்த்ததற்கு மேல் வசூலாகி இருக்கிறது. அன்று நான் பேசிய

போது குறிப்பிட்டேன் இவ்வாறு. 1962-ம் வருஷம் மார்ச்சு மாதம் 16-ம் தேதி நான் சொல்லியது இது. நம்முடைய நடவடிக்கைகளிலிருந்து எடுத்து மொழிவதற்குத் தலைவர் அவர்களின் இசைவு கோருகிறேன். "1961-62-ல் விற்பனை வரியிலிருந்து அரசாங்கம் எதிர்பார்ப்பதற்கு மேல் அதிகமாக ஒரு கோடி அல்லது இரண்டு கோடி வசூலிக்கப் படும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்று நான் கூறினேன். அது இப்பொழுது உண்மையாகி இருக்கிறது என்பதைக் காண்கிறேன். நான் சொன்னேன் ஒரு கோடி அல்லது இரண்டு கோடி ரூபாய் பொது விற்பனை வரி மூலமாக உபரியாக வசூலிக்கப்படும் என்று நம்புகிறேன் என்று. கணக்கு முடிந்து தணிக்கைக்குப் பிற்பாடு கிடைத்திருக்கும் விவரப்படி ஒரு கோடி 79 லட்சம் ரூபாய் எதிர்பார்த்ததற்கு மேல் வசூலாகியிருக்கிறது. அதையொட்டித்தான் நம்முன் இந்த வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பித்த ஆளும் கட்சித் தலைவரும், இச் சட்டமன்ற முதல்வரு மாகிய தொழில் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள்; முதல் முறையாக நாம் எதிர்பார்ப்பதற்கு மேல் வருகிற ஆண்டில் பொது விற்பனை வரி காரணமாக அதிகமாகப் பணம் வசூலாகும் என்று. அவர்கள் குறிப்பிட்டார்கள்.; நாம் எதிர்பார்க்கின்ற அளவு 19 கோடியே 21 லட்சம், ஆனால் அதில் முயற்சிகள் வலிவாக எடுத்துக் கொண்டால், 20 கோடி ஆகும் என்று எதிர்பார்க்கிறேன் என்று. நான் கருதுகிறேன், தலைவர் அவர்களே, கடும் முயற்சி இல்லா மலே 21 கோடி ரூபாய் பொது விற்பனை வரி மூலம் வசூலிக்கப் பட்டுவிடும் என்று. தணிக்கை இடப்பட்ட கணக்கு வெளியிடப் படுகிறபோது மீண்டும் இந்தச் சட்டமன்றத்தில் இருப்பேனானால் மெய்ப்பித்துக் காட்டுவேன். இனியும் 1963-64-ல் துண்டு விழும் என்று எதிர்பார்ப்பது இம்மாதிரி கூடுதலாக வசூலாகக்கூடிய ஒரு கோடியே 79 லட்சம் ரூபாய் காரணமாகவும், மத்திய அரசாங்க விற்பனை வரியிலிருந்து நமக்குக் கிடைக்கக் கூடிய தொகை காரணமாகவும் துண்டாகக் கடைசியில் நிற்காது என்று அழுத்த மான நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** அதனால்தான் வரி போட வில்லை.

**டாக்டர் அ. சிதம்பரநாதன்:** எல்லாவற்றையும் போட்டு விட்டோம் முன்னாலேயே. இந்த நீர் வரி (Water Tax) வந்து விட்டது. நில வரி (Urban Tax) வரப்போகிறது. இந்த ஆண்டுக்கு வரி போடவில்லை என்று சொல்ல முடியாது.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** மொழிப் பிரச்னை போலவே, நான் வரி போடவில்லை என்று சொல்லுகிறபோது நீங்கள் நான் போட்டதாக நினைத்தால், போட்டதாகவே வைத்துக்கொள்ள லாம்.

**டாக்டர் அ. சிதம்பரநாதன்:** இரண்டு கோடியே 74 லட்சம் ரூபாய் துண்டு விழுவதாகக் காட்டி இருப்பது பெயர் அளவில் தான். (After all, it is a notional deficit) அதைத்தான்

6th March 1963] [டாக்டர் அ. சிதம்பரநாதன்]

தான் விளக்கிக் கொண்டு இருந்தேன். இந்த அரசாங்கத்திற்கு மத்திய அரசாங்கத்திலிருந்து கிடைக்கப் பெறவேண்டிய சில தொகைகள் கொடுக்கப்படாமல் இருக்கின்றன என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். நாம் 1957-ஆவது ஆண்டு முதல் ஒரு குறிப்பிட்ட கடைநிலை ஊழியர்களுக்கு (Low-paid employees) சம்பள விகிதப்படியை உயர்த்திக் கொடுத்த காரணமாக மத்திய அரசாங்கத்திலிருந்து நிதி கேட்டுப் பெற்று வந்தோம். 1957-58-ல் ஒரு கோடி 47 லட்சம். 1958-59-ல் 1 கோடி65 லட்சம். 1959-60-ல் இரண்டு கோடி 24 லட்சம் கிடைத்தது. 1960-61-க்கும் 1961-62-க்கும் நமக்கு 2 கோடியே 30 லட்சம் ரூபாய் விதம் கிடைக்க வேண்டிய சுமார் 4½ கோடி ரூபாயும் கிடைத்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்? அந்த வகையில் மீண்டும் முயற்சி எடுக்க வேண்டும் என்று அரசாங்கத்தை வற்புறுத்த விரும்புகிறேன். நிதிக் குழு (Finance Commission) Ad-hoc grant என்று—தனி மானியம் என—சிறப்பு மானியம் என மூன்று கோடி 1962-63 முதல் கொடுக்கிறது. இது 1963-64-க்குக் கிடைக்க இருக்கிறது என்பதை உணர்வேன். துண்டாக நிற்கிற 4.50 கோடியை மீண்டும் மத்திய அரசாங்கத்திலிருந்து வற்புறுத்திப் பெறுவதற்கு வழிவகைகள் உண்டா, வாய்ப்பு கண்டு பிடிக்க முடியுமா என்று பார்க்குமாறு அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

தலைவர் அவர்களே, நம்முடைய வரவு செலவு இனங்களிலும் பொதுவாக பற்றுக் குறையைப் பற்றியும், ஆண்டு இறுதி இருப்பைப்பற்றியும், சில வார்த்தை சொல்ல விரும்புகிறேன். 1961-62-ல் நாம் திட்டமிட்டது இரண்டு கோடியே 85 லட்சம் ரூபாய் பற்றுக் குறை என்று. திருத்திய மதிப்பீட்டின்படி 6 கோடியே 37 லட்சம். உண்மை கணக்கு தணிக்கையாகி வந்திருப்பதைப் பார்த்தால், 9 கோடியே 61 லட்சம் துண்டு விழுகிறது. மதிப்பீட்டை விட மும்மடங்கு பற்றுக்குறை கடைசியில் ஏற்படுகிறது. டிசம்பர்-ஜனவரியில் திருத்திய மதிப்பீடு சமர்ப்பித்து, அடுத்த மார்ச் மாதத்தில் கணக்கு முடிந்து பார்க்கிறபோது, அது மும்மடங்கு அதிகமாக இருக்கிறதைக் காண்கிறோம். ஆகையினால் செலவினங்களை ஒழுங்காகக் கட்டுப்படுத்தி இருந்தால், தலை தடுமாற்றமாகச் செலவு செய்யாமலிருந்தால் இவ்வளவு பெரிய பற்றுக்குறை, எதிர் பாராத அளவுக்கு ஏற்பட்டிருக்காது என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

தலைவர் அவர்களே, 'New Services' என்ற தலைப்பிலே, 'புதுப் பணிகள்' என்ற தலைப்பிலே ஆண்டு தோறும் நாம் திட்ட மிட்டதிற்கு மேல் அதிகமாகச் செலவு செய்தால் புதுப் பணி என்று சொல்லி ஆண்டு தோறும் சட்டசபை முன் கொண்டு வர வேண்டாம் என்று பொதுக் கணக்குக் குழு (Public Accounts Committee) 1950-ல் சொல்லியது. அதையொட்டி ஆண்டு தோறும் 'New Services' என்ற தலைப்பில் இவற்றைக் கொண்டு வருவது இல்லை. இருந்தாலும் திட்டமிட்டதற்கு மேலே

[டாக்டர் அ. சிதம்பரநாதன்] [6th March 1963

இவ்வளவு அதிகமாகச் செலவாகியிருக்கிறது என்பதை ஆண்டு தோறும் கணக்கில் தரவேண்டும் என்று Public Accounts Committee சிபார்சு செய்தது. அதை ஒட்டித்தான் நமக்குக் கொடுத்திருக்கிற வரவு செலவு நினைவுக் குறிப்பில் (Budget Memorandum)-ல் துணைச் சேர்க்கை IX காணப்படுகிறது அந்த அறிக்கைப்படி பார்த்தால், சில இனங்களில் 150 சதவிதம் 200 சதவீதம் திட்டமிட்டதற்கு மேல் செலவாகி இருக்கிறது. இதைக் கண்டிப்பாகக் கட்டுப் படுத்த முயல வேண்டும் என்று நான் வலியுறுத்த விரும்புகிறேன். இதைப்பற்றி முன்பே ஒரு முறை சொன்ன போது அப்பொழுது நிதியமைச்சராக இருந்த கனம் சி. சுப்பிர மணியம் அவர்கள் சொன்னார்கள். 'அதை நானும் கட்டுப் படுத்தத்தான் முயலுகிறேன். இது பெரும் தலைவலியாகத்தான் இருக்கிறது' என்று சொன்னார். இந்தத் தலைவலியைத் தீர்ப்ப தற்கு எந்த வழி காண வேண்டுமோ அதைக் காண வேண்டு மென்று வற்புறுத்துகிறேன். திட்டத்தில் மதிப்பீடுகள் போட்ட பொழுது, நீர்ப்பாசனத்திற்காக, பரம்பிக்குளம், பெரியார் திட்டத்தில் ஆளியாற்று, மண்ணைத் தோண்டுவதற்காக 3 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டது. முதல் மதிப்பீட்டில், கடைசியில் செல வானது 7 லட்சம்; திட்டமதிப்பீடு (Estimate) 3 லட்சம், முடிந்தது ஏழு லட்சத்தில். இது 200 சதவிகிதத்திற்குமேல் இல்லையா? இதைப்போல் பல இனங்கள் இருக்கின்றன. இம் மாதிரி நெருக்கடி இல்லாத காலத்தில் மித மிஞ்சி 200 சத விகிதம், எதிர்பார்க்கப்பட்டதற்கு மேல், திட்டமிடப்பட்ட தற்கு மேல், செலவு செய்யப்படுகின்ற அதற்குத் துல்லிய திட்டம் என்று ஏன் பெயர் என்பது தான் என்னுடைய கேள்வி. இதுகாறும் நான் சுட்டிக் காட்டியதெல்லாம், வரவு-செலவு இனத்தில் நாம் முன்னெச்சரிக்கையாக இருந்து திட்டம் வகுக்க வேண்டுமென்பதாகும்.

3-20 p.m. இனி அரசாங்கம் எந்த வகையில் பாராட்டப்படத்தக்க தாக இருக்கிறது என்பதற்கு ஒன்றிரண்டு சொல்லுவேன். கைத் தொழில் நிலையங்கள் அமைக்க முன் வருகிறவர்களுக்கு நமது அரசாங்கம் லைசென்ஸ்சுகளைத் தாராளமாக வழங்க வழிவகை செய்திருப்பதைப் பாராட்டுகிறேன். அல்லாமலும் அவர்களுக்கு வேண்டிய மின் வசதிகளும், நீர் நில வசதிகளும் செய்துதந்திருப் பது பாராட்டுக்குரியது. பாலிடெக்னிக்குகள் பல அமைத்து, பல வழிகளில் தொழில் நுட்பக்காரருக்கு நல்ல பயிற்சி தர வசதி கள் செய்து கொடுத்திருக்கின்ற அனைத்தையும் நான் முழு மனதோடு வரவேற்கிறேன்; பாராட்டுகிறேன்.

கல்வி தொடர்பாக நமது மாநிலத்தில் 28 கோடியே 72 லட்சம் ரூபாய் சிறந்த அளவில் ஒதுக்கப்பட்டிருப்பது மிகவும் வர வேற்கத்தக்கது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்கு ரூபாய் 10 லட்சத்து 63 ஆயிரம் என்றும், சென்னைப்பல்கலைக்கழகத்திற்கு ரூபாய் 10 லட்சத்து 15 ஆயிரம் ரூபாய் என்றும் மானியம்

6th March 1963] [டாக்டர் அ. சிதம்பரநாதன்]

வழங்க அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது. சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையை வளர்க்கவும், அதைப் பலப் படுத்தவும் அரசாங்கம் இன்னும் மான்யங்கள் வழங்க வேண்டு மென்பதை நான் வற்புறுத்த விரும்புகிறேன். தமிழ் வளர்ச்சி காரணமாகவும், கலை வளர்ச்சி காரணமாகவும் அரசாங்கம் ஏதாவது திட்டமிட்டுச் செயற்படுத்த முற்பட்டால், அவற்றைச் செயற்படுத்த தயாராய் இருக்கிறீர்களா என்று சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அறிக்கை விட்டுக் கேட்டறிய வேண்டு மென்பதை நான் அமைச்சரவர்களிடம் முன் ஒரு முறை நேரில் சொல்லியிருக்கிறேன்; இப்போது அவர்களுக்கு அதை நினைவுப் படுத்தி, முறையாகவும் மேடையின் கண்ணும் வற் புறுத்த விரும்புகிறேன்.

இனி, நமது மாநிலத்தில் தொடக்கக் கல்வி காரணமாகச் சிறந்த முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. இது மிகவும் பாராட்டு தற்குரிய செய்தி. எந்தக் கல்வி அமைச்சரும், இயக்குநரும் பெருமைப்படக்கூடிய செய்தியாகும். 6 முதல் 11 வயது வரையில் உள்ள குழந்தைகளை பள்ளிக்கூடத்தில் கொண்டு சேர்ப் பதில், 1962-63-ல் என்ன திட்டமிட்டோம என்றால் 4 கோடியே 4 லட்சத்து 70 ஆயிரம் பேர் சேர்க்கப்பட வேண்டும், இந்த மார்ச்சு முடிவதற்குள் என்பது. ஆனால் டிசம்பர் 1962-க்குள்ளாக இந்த இலக்கினைக் கடந்து, 5 லட்சத்து 70 ஆயிரம் பேர் பள்ளிக்கூடங்களில் சேர்க்கப் பட்டிருக்கிறார்கள். இது மிக்க பெருமிதத்துக்கும், பெருமைக்கும் உரியது. இது குறித்து நான் கல்வியமைச்சரையும், கல்வி இயக்குநரையும் மனமாரப் போற்றுகிறேன்.

இனி, நமது மாநிலத்தில் பல்கலைக்கழகக் கல்வி இன்னும் நன்றாக வளர்க்கப்பட வேண்டிய நிலையிலிருக்கிறது. பல்கலைக் கழகம் மதுரையில் அமைக்க நல்ல வாய்ப்பும் வசதியும் உடனடி யாக இருக்கின்றன என்று குறிப்பிட விரும்புகிறேன். சென்னையிற் போல் Post-graduate Research Institute அமைத்திருப் பதாலும், பல்வேறு தொழிற் கல்லூரிகள் இருப்பதாலும் ஒரு சிறந்த கேந்திரமாக இருக்கிறது. அதை அமைச்சரவர்கள் அறிவார்கள். இப்போது கல்விக்குரிய பணத்தைக் குறைக்காமல் இருக்கிறோம் என்று கூறாமல், அதற்கு அதிகமாகத்தர முன் வந்து பல்கலைக் கழக மானியக்குழு (University Grants Commission) இடத்தில் வாதாட வேண்டிய வகையில் விண்ணப்பித்து வாதாடி, அதற்கென்று நிதி திரட்டினால், மதுரையில் உள்ள பெருஞ் செல்வர் களும் கல்விப் பணியில் ஆர்வமுடையவர்களும் ஆகிய திரு. கரு முத்து தியாகராஜ செட்டியார் போன்ற வள்ளல்கள் அதற்கு உதவ முன் வருவார்கள் என்பது என்னுடைய அழுத்தமான நம்பிக்கை. தொழிற்றுறையிலும், தொடக்க நிலைக் கல்வியிலும் தனியா ருடைய உதவியைப் பெற நாம் முன் வருகிறபோது, ஏன் பல்கலைக் கழகப் படிப்பு விஷயமாகத் தனியார்களுடைய உதவியைப் பெறு வதற்குத் தயங்க வேண்டுமென்பது எனக்குப் புரிவதில்லை. அந்த

[டாக்டர் அ. சிதம்பரநாதன்] [6th March 1963

வழியில் நாம் தட்டிக் கேட்போமேயானால், கை யேந்தினால் நிறையக் கிடைக்கப்பெற்று அடுத்த ஆண்டு இறுதிக்குள்ளாகவே மதுரையில் இன்னொரு பல்கலைக் கழகம் ஏற்பட்டு, பல்கலைக் கழகக் கல்வி வளர்ச்சிக்கு வழி செய்தவர்களாவோம் எனபது என்னுடைய நம்பிக்கை.

அடுத்து, இப்போது இடை நிலைப் பயிற்சி ஆசிரியர்கள் (Secondary Grade Trained Teachers) எட்டாவது வகுப்புப் பாடம் எடுக்கக்கூடாது என்றும், L.T. ஆசிரியர்களை நியமிக்க வேண்டுமென்றும் சிலர் கருத்து தெரிவித்திருப்பதாகவும், ஒருவேளை அரசாங்கம் அப்படிச் செய்தாலும் செய்துவிடுமென்ற அச்சம் இருப்பதாகவும், சொல்லப்படுஞ் சொற்கள் காதில் விழு கின்றன. அவை உண்மையானால், எட்டாவது வகுப்புக்குப் பாடம் எடுக்க B.A., L.T., ஆசிரியர்களை நியமிப்பதாக இருந் தால், முன்னர் வேலையில் இருந்த (Secondary Grade Trained Teachers) பாதிக்கப்படாமல் பாதுகாப்புச் செய்ய வேண்டு மென்பதையும் வற்புறுத்த விரும்புகிறேன்.

செகண்டரி கிரேட் ஆசிரியர்களுடைய ஊதிய படி நிலை Pay Commission Report-குப் பிறகும் உயராமல் இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்டி, அவர்கள் சம்பள, படி நிலையை உயர்த்த ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, இதனோடு அமைகிறேன். வணக்கம்.

SRIMATHI S. MANJUBHASHINI: Mr. Chairman, Sir, I thank you for giving me an opportunity to speak on the Budget. There are one or two points on which I should like to say a few words. We are all having a sense of relief that this State has not levied any fresh taxes. People are not to that extent affected. In a democratic set-up of Government whatever measures are undertaken by the Government, they have to have the sanction and blessing of the public and the acceptance of those proposals.

We know, Sir, that there is an emergency, and we, men, women and children are all prepared to meet the emergency in any form that may be required of us. A large amount of money is required for defence effort and the public came up with magnificent response to the appeal made by the Hon. the Prime Minister, when the Chinese invaded India.

But now there is this new Gold Order. There is lot of public resistance to this gold order. When the public appeal came from the Hon. Prime Minister, the members of the public men, women and children came in large numbers and gave whatever little gold they had. Even the poorest among them gave in response to the appeal of the Prime Minister. They gave the gold even unasked. If that position had been exploited further, I am sure— I am now not talking about the hoarded gold which is supposed to be lying with many people—the common people, men, women and children would have given all the gold they possessed. But anyway there is now the gold order and there is a lot of resistance to it.

6th March 1963] [Srimathi S. Manjubhashini]

Sir, many hon. Members in this Council talked about the 'Thali' and the quantum of gold which should be used for it, and the purity of the gold, namely, 22 ct. or 14 ct. or whatever it is. If publicity has been done along the line I had suggested a minute ago, our women would have come forward with their 'Thalis' even if necessity arose. But when there is a measure introduced which has not got the blessing of the public, naturally there is a lot of of resistance to it.

Now, Sir, there are no 'Thalis' in Northern India. When they are married, women just wear something on their feet and have this 'Kunkum' on their foreheads. There are certain other communities who wear other jewels when they are married. But it is not so in South India. As was mentioned by a member of the Muslim community even the muslims wear 'Thali' during the time of the marriage. And here I may mention that even Christians do it. I hope many of the hon. Members would have attended the marriage of our Hon. Chairman's son last week, at the St. George's Cathedral. In the marriage scroll which was distributed to every one of us it was said: 'With this Thali and this ring we are wedded'. Though the 'Thalis' did not exist in the marriage ceremonies, the Christian Missionaries have understood the sentiments of the people and have, therefore, come forward to introduce this 'Thali' with the ring. There are many people, therefore, who plead for the 22 ct. gold for 'Thali'. So far as this 'Thali' is concerned, it may not be out of place to mention that even in England where gold ornaments are made of 14 ct. or 9 ct. gold, the special wedding rings are made only of 22 ct. gold. Why? Because, the sanctity of marriage is recognized even in a country where there is lot of divorce. There is something sacred about marriage. I do not say that Thali should only be made out of 22 carat gold. 3-30 p.m. But if there is resistance among the people to a particular measure, the Government should take notice of it and at least try to explain to the people why it is that they are doing it. Surely we in India whether men, women or child have always accepted the troubles and tribulations we have had to face. It is not as if we had started a resistance movement about anything. We would appeal to the Finance Minister in the Centre to say, "This is what we want gold for". Then I am sure we will give all the gold wherever it is. This is what I would like to mention on behalf of the women here in South India. It is asked, "What is there; after all it is just a sentiment". Sir, one may say that it is just a sentiment. One hon. Member said the other day that it was just a sentiment and people wore yellow thread with a piece of turmeric attached to it. It is sentiment that applies even to national feelings. Some people think that it is sentimental. That is natural. There are other parties who think that it is sentiment to be international. What is sentiment after all? The love that one bears for one's country can also be classified as sentiment.

Coming to Education, we are very proud, Sir, of the achievements of our Education Minister. He has not curtailed any programme so far as education is concerned and Madras and Bombay are always quoted as examples for the proper implementation of whatever programme that has been chalked out. Members belonging to the teaching profession have stressed the fact that more teachers should be trained. I wholeheartedly agree with them. But I would like to go one step further and tell them, when teachers for training are selected, select good material. Let them be teachers in the proper sense and not teachers who go to the schools from the 1st to the 31st and get their pay on the 1st. If we are going to select such people as teachers, I am very sorry as to the type of students we are to turn out later. I would even go to the extent of saying, Sir, that these teachers should now and then be given a special test to see whether they have come up to the standard and whether they are still sub-standard. Because I have in a limited way, some experience of handling teachers and I know how they have handled the students in their respective classes.

Sir, one word about education. A lot of facilities are given for school children by way of fees, books, etc. We were the people who fought for this and still we are fighting for this. But, Sir, I would like to stress one part of it here. Everything given free is not appreciated. If anything is given free to one, one does not value it. If one works for it, definitely it has very much more value than getting free. I quote this example, because in England, I believe, in all schools many things are given free to children. and the children have no incentive to study seriously. They just come in because they get all the facilities and a very few of them are really serious about their education. That may not be the case with our country. But parents should be made to feel the responsibility that they are getting some special advantage from the Government in getting education to their children, and, as such, they should be made to contribute some little thing to the schools. It is only then they would value the facilities. There is another thing, Sir. Every part who sends his child to school, he or she, wants the child to go up to the college. That is not possible. That is not fair either to the parent or to the child. Because the teacher who teaches that child knows its aptitudes. Therefore, the teacher's advice should be taken as to what type of training that boy or girl is fit for, and that training only should be given to the child.

Touching on Health, Sir, I am afraid I may offend my hon. friend a little bit. But there is lot to be said about the conditions in this City and in other urban areas. There is a special Malaria Eradication Programme which is being implemented. Volunteers are sent from house to house to ask, "Do you have fever. Has something happened in your house?" There are many open drain water channels in the City and other urban areas, and the drain with all the night-soil in it is turned out in the open, and there

6th March 1963] [Srimathi S. Manjubhashini]

is stinking in the area. Madras was considered to be the cleanest city in the whole of India. But I am afraid now things have deteriorated to such an extent that we can no longer call it a clean city. Because, whether when one goes along this main road or that main road, there is such a lot of foul smell emanating from all these drain water channels. As such, naturally there is a lot of epidemic. Already there are instances of whooping cough and smallpox, and as summer advances, we do not know what other epidemics will come up. On the one hand, there are a large number of school-going children, and on the other there is this infection spreading from the canals, which only bring in a lot of sickness and ill-health. It is no use spending money on medicines. But we must try and see that we eradicate some of these things before we spend money on medicines.

Talking on medicines, Sir, in the Poonamallee High Road, some years back there was a School of Indian Medicine, then a College of Indian Medicine and then later on an Indigenous College of Medicine. I do not exactly remember the name. Everything has now gone. There is a Kilpauk Medical College and next to it inside the Spur Tank, sandwiched between many policemen's quarters, there is a small hospital for Indian Medicine, namely the Siddha, Ayurveda and Unani. The conditions in that hospital, they are not to blame, are terrible. Sir, I understand that the Kilpauk Medical College is going to be shifted to some other place, in which case I would definitely request the Government to shift the Indigenous Medical College back to its original place. Nowadays, science has advanced. I may perhaps be offending the susceptibilities of the Leader of the Opposition, because he is an allopathic doctor.

Dr. A. LAKSHMANASWAMI MUDALIAR: Sir, may I assure the hon. lady Member that I am allergic to all this?

Srimathi S. MANJUBHASHINI: At one time, it was thought in Ayurveda a lot of a mercury would be given, the patient would die, and that he would get this complication and that complication, etc. It is more the modern drugs that are causing havoc on the health of our people, because the doctors without going deep into the question, just by reading the pamphlet which somebody has circulated from America or Germany or England, dose the people with all the modern drugs. I am not a doctor myself and I do not know what is what. But the best thing I do is that I do not take any medicine.

The Hon. Sri R. VENKATARAMAN: You are safe.

Srimathi S. MANJUBHASHINI: Yes, I am safe. One takes the medicine and then to correct the after effects of it, one has to take a lot of tonic and what not. I have come to the conclusion now, Sir, that any Ayurvedic medicine is not so harmful as mycins and terramycins. I would request the Government to consider more seriously about this. I am not joking about this Indian

medicine. There are lot of wonderful cures that these people have effected. I have seen with my own eyes the cures effected by Indian medicine. There are hospitals where miraculous cures, even for polio patients, have been effected. Recently the Prime Minister of India inaugurated a Research Centre in Ceylon for the development of Indian medicine, Ayurvedic medicine.
3-40 p.m. I would request the Government to see that more encouragement is given to the indigenous system of medicine. I believe there are wonderful text-books regarding these medicines and they are all in the Sanskrit language. Some people may be allergic to the Sanskrit language. In whatever language it is, it is knowledge and that knowledge can be translated into the most modern languages. I understand that in those books the medical terms are in special words which most of the Ayurvedic doctors themselves do not understand. So, I would suggest to the Government to get such of those people who know the language and see that these books, very valuable and precious books, are translated and made known to students who are studying this particular line of medicine, and see that this great system does not die, because after a few years you will find that people would not know one herb from another. They may bring a " thulasi " and call it something else. There was a Herbarium also in the Indian Medical School. We do not know what happened to it. So, I would request the Government to give special consideration to these forms of medicine. Especially now we have cut all the imports and some of the medicines that are prepared locally have been found fault with, for not being of the proper standard.

During the Second World War in England though they had to spend all the money, special care was taken about the health of the children. The health of the children was considered even above the necessities of war. So, they took every child into consideration and saw that everything was given to make it a healthy child. As regrads health, welfare and education of children, there are very many training programmes, and I am glad to state here that the State has not cut down any of them inspite of the fact that we have to cut our coat according to the cloth.

One word about the walfare workers. They it was who have woken the masses in India and made them realise their responsibilities. I am not talking about the politicians or the political workers. They give trouble wherever they go, to whichever party they may belong. I am referring to the workers who have no political bias attached to the work. We may be politicians, I do admit. I am a very staunch member of a particular party. But when I go to work, I do not go with the spirit that I belong to that particular party but with a social bias. The State and the Government should recognise the work done by the welfare worker. That is what has brought the response even in this Emergency in the magnificent way it has done.

6th March 1963] [Srimathi S. Manjubhashini]

Then, one word about the handlooms. I have spoken to the Minister already about it. There is a glut in the handloom market. Everybody realises that the articles should be sold. I would appeal to the Minister for Industries to use his influence in this matter. There are a lot of institutions all over the country to which the Government are giving grants. Most of these institutions are not able to buy the quantity of cloth required for their members. When you go to a handloom shop, you are asked to buy for Rs. 50 and no more. If you want to buy cloth for Rs. 2,000 or Rs. 3,000 for an institution for its annual requirement, you have to give so many names for Rs. 50 each in order to get the rebate. If you want to buy for Rs. 2,000 and you say that you want it for the Seva Samajam Boys, they will not give you rebate. I have already represented the matter to the Minister for Industries. Government should do something in the matter because they give grant to all these institutions. In some way let it go back to the Government. You have to give one name as Manjubhashini, another as Balasubramanyam and another as Anbazhagan. You have to give fictituous names. That means we are asked to tell lies when we go to buy cloth.

THE HON. SRI R. VENKATARAMAN : I may assure the hon. Member that when they give the names of children, they are not giving fictitious names. There is no harm in just typing out the names of the children for whom it is bought. The intention is that the concession should not be abused. Other wholesale dealers should not buy it, then sell it, and make profit out of it.

SRIMATHI S. MANJUBHASHINI : I accept the suggestion of the Hon. Minister. But when we go in the name of an institution or we get a chit from somebody responsible, we should be allowed to buy it. Giving 100 or 200 names means a lot of time wasted both by the people selling the cloth and by the people who buy the cloth.

When CARE milk is distributed to institutions, you do not want the names of beneficiaries. It is given in bulk, whether it is milk for Ananda, Suguna or somebody else. I understand there is a lot of difficulty in the matter of handloom. I request the Minister to give serious consideration to the matter.

I thank you, Sir, for giving me this opportunity to say these few words.

* திரு. ஏ. சுப்ரமணியம் : கனம் அவைத்தலைவர் அவர்களே, 1963-64 வரவு செலவுத் திட்டத்தை நான் மகிழ்சியோடு போற்றி வர வேற்கிறேன். இந்த வருடம் வருமானம் 124 கோடியே 45 லட்சம் ரூபாய் என்றும், செலவு 127 கோடியே 19 லட்சம் ரூபாய் என்றும், துண்டு விழுவது 2 கோடியே 74 லட்சம் ரூபாய் என்றும் அமைச்ச ரவர்களால் குறிப்பிடப்பட்டிருக்கிறது. துண்டு விழும்படியான தொகைக்கு புது வரிகள் போடாமல், வரும் வரிகளிலிருந்தே சரிக் கட்ட முடியும் என்ற நிலையை அனுசரித்து புது வரிகள் போடா மல் விட்டிருப்பது குறித்தும் நாம் சந்தோஷப் படவேண்டியது

[திரு. ஏ. சுப்ரமணியம்] [6th March 1963

தான். இருந்தாலும்கூட நாட்டிலே இப்போது பலர் பல விதமாகப் பேசுகிறுர்கள். நான்கூட இன்றையதினம் இந்த வரவு-செலவுத் திட்டத்தின் மீது பேசக்கூடாது என்று தான் இருந்தேன். என்னுடைய உடல் நிலேயும் சரியில்லே. இருந்த போதிலும் கூட, நான் பொது மக்களுடைய பிரதிநிதி என்ற முறையில் இன்றைய தினம் இந்த விவாதத்தில் கலந்து கொள்ளவில்லேயென்ருல், என் கடமையைச் செய்ய தவறி விட்டவனுவேன் என்கின்ற நிலே ஏற்படும் என்பதை நான் அறிந்து, இன்றைய தினம் நான் பேச முற்பட்டிருக்கிறேன்.

குறிப்பாக மத்திய அரசாங்கம் இன்றைய தினம் சற்றேறக் குறைய 275 கோடியே 50 லட்சம் ரூபாய்க்கு புது வரிகள் போட்டிருக்கிருர்கள். நம்முடைய மாகாணத்திலே வரி போடாததற்கு காரணம், மத்திய அரசாங்கத்தில் இருக்கும்படியான நிதியமைச்சரும், நமது சென்னே மாகாணத்தில் இருக்கும்படியான நிதியமைச்சரும், மற்ற மாகாணங்களிலிருக்கும் நிதியமைச்சர்களும் ஒன்று சேர்ந்து சதி செய்து இம் மாதிரியான ஒரு வரவு செலவு திட்டத்தை சமர்ப்பித்திருக்கிருர்கள் என்பதாகப் பேசுகிருர்கள். இது சதி அல்ல. விதியின் நிலே; மக்களுடைய நிலே. தேசத்திலிருக்கும்படியான நெருக்கடியை உத்தேசித்து இப்போது வரி போடப்பட்டிருக்கிறது. ஆகையால் கொஞ்சம் மதியை வைத்துப் பார்த்தால் நமக்குப் புலப்படும்.

3-50 p.m. இப்போது பொதுவாகப் பார்க்கலாம். கார்டு 5 நயாபைசாவுக்கு விற்றுக்கொண்டிருந்தது. அதற்கு வரி போட்டிருப்பதால் இந்த ஏப்ரல் மாதம் முதல் அது ஒரு நயா பைசா அதிகமாக்கி விற்கப்போகிருர்கள். அதாவது 6 நயா பைசாவிற்கு அதைப் பார்த்த உடனே பலர் ஏழைகளே அது அதிகமாகப் பாதித்து விட்டது என்று பேசுகிருர்கள். வரி, வரி என்று வரிந்து தள்ளுகிருர்கள், இப்படிச் செய்யலாமா என்று சொல்லுகிருர்கள். ஏழைகள் ஒரு நாளேக்கு எத்தனே கார்டுகள் எழுதுவார்கள், எழுத முடியும் என்பதை நான் சவால் செய்து கேட்கிறேன். குடிசையில் இருப்பவனேப்போய் கேட்டுப்பாருங்கள். எத்தனே மாதத்திற்கு ஒருமுறை கடிதம் எழுதுகிருர்கள் என்று கேட்டால், ஒரு மாதத்திற்கு ஒருமுறைகூட எழுதுவதில்லே. மூன்று மாதத்திற்கு, ஆறு மாதத்திற்கு ஒரு முறை தான் எழுதுவார்கள். ஆகையால் கார்டு விலே உயர்ந்துவிட்டதே என்று கூக்குரல் போடுவது கொஞ்சமும் நியாயமில்லே. ஒரு நயா பைசா கொடுப்பதில் மக்கள் கவலேப்படமாட்டார்கள்.

அடுத்தபடியாக, மண்ணெண்ணே. ஒரு பாட்டில் தற்போது 25 நயா பைசாவாக விற்கிறது. அதற்கு வரி ஒரு பாட்டிலுக்கு மஞ்சள் எண்ணேக்கு 7 நயா பைசாவும், வெள்ளே எண்ணேக்கு 10 நயா பைசாவும் வரி போட்டிருப்பதாகக் கூறுகிருர்கள். நான் கேட்கிறேன், எந்தக் குடிசையில் உள்ளவர்கள் ஸ்டவ் வைத்துக் கொண்டு அடுப்பு எரிக்கிருர்கள் என்று. ஏழைகளே பாதிக்கின்றது என்பது உண்மைக்கு மாறுபட்ட விஷயம்.

6th March 1963]

**திரு. ஆர் வெங்கடாசலம் :** தலைவர் அவர்களே, அங்கத்தினர் அவர்கள் சென்னை அரசாங்கத்தின் பட்ஜெட்டின் மீது பேசுகிறார்களா, சென்ட்ரல் கவர்ன்மெண்ட் பட்ஜெட்டில் பேசுகிறார்களா?

**திரு. ஏ. சுப்ரமணியம் :** அதை ஏன் அவர்கள் கூறவேண்டும்? ஏன் சதி செய்ததாகக் கூறுகிறார்கள்? நான் மதியை உபயோகிக்க வேண்டுமென்று சொல்கிறேன். எண்ணெய் வரியை உயர்த்துவதால் யாருக்கு கஷ்டம்? தி. நகரில், மைலாப்பூரில், மற்ற இது போன்ற இடங்களில் இருக்கிறவர்களைப் பாதிக்கலாம். காடை விளக்கு எரிப்பவர்களை பாதிக்கும் என்று சொன்னார்கள். மாதத்திற்கு ஒரு பாட்டில் எண்ணைதான் அவர்களுக்கு ஆகும். அதற்கு 10 நயாபைசா அதிகமானால் மக்கள் கவலைப்படமாட்டார்கள்.

**மிஸ்டர் சேர்மென் :** இது எல்லாம் சென்ட்ரல் டாக்சேஷன் ஏன் அதைப்பற்றி இங்கு பேசவேண்டும்?

**திரு. ஏ. சுப்ரமணியம் :** தலைவர் அவர்களே, ஒத்துக்கொள்கிறேன். வரி என்பது இந்த மாகாணத்துக்கும் சம்பந்தப்பட்டதாக இருப்பதால், பேசுவதில் தவறு இல்லை என்று எண்ணுகிறேன். மற்றக் கட்சிக்காரர்கள் எல்லாம் இதைப் பேசாமல் இருந்திருப்பார்களானால், நானும் பேசாமல் இருந்திருப்பேன். இல்லாததால் தான் மதியைப் பற்றியும் விதியைப் பற்றியும் சொல்கிறேன். சதி செய்துவிட்டார்கள் என்று சொல்லுவதால்தான் மதியை உபயோகிக்கச் சொல்லுகிறேன். ஒரு உதாரணம் சொல்கிறேன், தலைவர் அவர்களே. இங்கிலாந்து நாட்டு பிரதமர் அட்லி அவர்கள்தான் நம்முடைய தேசத்திற்குச் சுதந்திரம் கொடுத்தவர். இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்பு அவர்கள் சென்னைக்கு வந்திருந்தார்கள். அப்போது மாஜி மெம்பராக இங்கிருந்த ரஜாகான் அவர்களும் நானும் அவர்கள் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் அப்போது ஒரு கேள்வி கேட்டோம். தொழில் கட்சி அதிகாரத்தில் நீங்கள் பதவியில் இருந்தீர்கள். இப்போது சர்ச்சில் கன்சர்வேட்டிவ் கட்சி அதிகாரத்தில் வந்திருக்கிறார்கள். மறுபடியும் தொழிற் கட்சி வருகிறது. இப்படி மாறிமாறி வருகிறதே என்று கேட்டோம். அதற்கு அவர், "இப்போது சர்ச்சில் கட்சிக்காரர்கள் அதிகாரத்தில் இருக்கிறார்கள். நாங்கள் எதைச் சொன்னோமோ அதை இப்போது சர்ச்சில் கட்சி அரசாங்கத்தில் செய்கிறார்கள். ஆகையால் அவர்கள் செய்ததை நாங்களும் ஆதரிக்கிறோம்" என்று சொன்னார்கள். அதைப்போல காங்கிரஸ் அரசாங்கம் செய்வதை இவர்கள் ஏற்றுக் கொண்டால் நல்லது. இப்போது இருக்கிற திராவிட நாட்டுப் பிரிவினையை விட்டுவிட்டால், பொதுமக்கள் ஒருவேளை இவர்களை ஆதரித்தாலும் ஆதரிக்கலாம். காங்கிரஸ் மக்களுக்கு உரியதைச் செய்கிறார்கள். ஆகையால் மற்றக் கட்சிக்காரர்கள் கட்சிக்காக எதையும் பேசுவது பிரயோசனம் இல்லை. இது சம்பந்தமாக ஒரு கதை ஞாபகத்தில் வருகிறது. ஒரு மாமியார் இருந்தாள். அந்த அம்மாவுக்கு ஒரு மருமகள். ஒரு நாள் ஒரு பிச்சைக்காரன் வந்து அம்மா பிச்சை என்று அங்கு வந்து கேட்டான். மருமகள் சொன்னாள், பிச்சை கொடுக்கவேண்டியது

நியாயம்தான், ஆனல் மாமியார் இல்லே, பின்புறம் போயிருக்கிருர்கள். பிறகு வா! இப்போது பிச்சை இல்லே! என்ருள். போகச் சொன்னுள். மாமியார் பின்னல் இருந்து பார்த்துக் கொண்டே இருந்தாள். உடனே பிச்சைக்காரனேக் கூப்பிட்டாள். மருமகள் என்ன சொன்னுள் என்று அவனேக் கேட்டாள். அவன் மருமகள் சொன்னதைச் சொன்னுன். மாமியார், "அவள் எப்படி பிச்சை இல்லே என்று சொல்லலாம். இந்த விட்டுக்கு அதிகாரியா அவள்? இதோ நான் சொல்கிறேன், உனக்குப் பிச்சை இல்லே, போய்வா" என்று சொன்னுள். அதுமாதிரி இருக்கிறது. அப்போது ராஜகோபாலாச்சாரி காலத்தில் எவ்வளவு கஷ்டம் இருந்தது? அதைச் சமாளிக்க முடியவில்லே. எப்படியோ சமாளித்துக் கொண்டோம். மருமகள் போல நமது நிதி மந்திரி அவர்கள் வரி போட்டால் மாமியார் மாதிரி பின்புறம், அங்கிருந்து கொண்டு நாங்கள் எதிர்க்கப் போகிருேம், கூட்டங்கள் போடப் போகிருேம் என்று சொன்னல், அதை ஒப்புக்கொள்ளும் அளவுக்கு மோசமாக பொதுமக்கள் இல்லே. உறுப்பினர்கள் கூட இல்லே என்று தைரியமாக நான் சொல்வேன். ஏனெனில் மதிப்பிற்குரிய லட்சுமணசாமி முதலியார் அவர்கள் இருக்கிருர்கள். கனம் கே. பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் இருக்கிருர்கள். இவர்களிடத்தில் பொறுப்பைக் கொடுத்தால் கூட இப்போது போட்டிருக்கிற வரியில் சில திருத்தங்கள் செய்யலாம். ஆனல் வரி போடாமல் இருக்கமுடியாது.

**திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார்:** இப்போது 40 சதவிகிதம் தயாராக வந்திருக்கிருர்கள்.

**திரு. ஏ. சுப்ரமணியம்:** சந்தோஷம். இன்னும் 60 சதவிகிதம் ஏறியாகவேண்டும் வந்தாகவேண்டும். நாற்பதிலிருந்து ஒன்று எண்ணும்படி எண்ணிக்கைக்கு ஒன்றுக்குப் போய்விட்டாலும் போய்விடும். ஆகையால் அதை நாம் நம்பமுடியாது. மேலே போகுமோ கீழே போகுமோ, யாராலும் அதைச் சொல்ல முடியாது. நண்பர் ரொம்ப நல்லவர். ஒரே பிடிவாதம் ஒரே மாதிரி சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். பிற்காலத்தில் நாம் சொல்வதை அவர்கள் ஏற்றுக் கொள்ளும் நிலேமை ஏற்படும்.

பெட்ரோலுக்கு வரி போட்டிருக்கிறது. பெட்ரோலுக்கு வரி போடலாமா என்று பேசுகிருர்கள். பெட்ரோல் எதற்கு உபயோகப்படுத்துவது? காருக்கு. எவ்வளவுபேர் மோட்டார் வைத்திருக்கிருேம்? கனம் லட்சுமணசாமி முதலியார் அவர்கள் கனம் பாலசுப்ரமணிய அய்யர் போன்றவர்கள் வைத்திருக்கலாம். இங்கு உள்ள உறுப்பினர்களுக்கு எத்தனே பேருக்கு கார் இருக்கும்? ஆகையால் குடிசையில் இருக்கிறவர்களுக்கு மோட்டார் கார் உண்டா? புரியாத்தனமாக, அறியாத்தனமாக, தெரியாத்தனமாகப் பேசுகிருர்கள். பத்திரிகைக்காரர்கள் கூட வரியைப்பற்றி ஆராயாது வரிந்து தள்ளுகிருர்கள். ஆளும் கட்சி எதற்குப் போடுகிருர்கள்? இவர்களுக்கு ஆசையா? இந்த மாதிரி சட்டசபையில் அங்கத்தினராக வரவேண்டுமென்று தியாகம் செய்தோம். ஜவஹர்லால் நேரு கூட இந்திய பிரதமராக

6th March 1963] [திரு. ஏ. சுப்ரமணியம்]

இப்படி வருவார் என்று நினைத்தாரா? கனம் காமராஜ் இங்கு முதலமைச்சராக வருவதற்காகவா தியாகம் செய்தார்? ஆகையால் நாட்டுக்கு உரியவர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களை நாடி நல்லது செய்யுங்கள் என்று மக்கள் எங்கள் கையில் ஒப்படைத்திருக்கிறார்கள். எப்படி நாட்டை ஆளமுடியும்? எப்படி நாட்டைக்காப்பாற்ற முடியும்? நெருக்கடியை உத்தேசித்து ஏதோ சில நல்ல காரியத்தை செய்கிறோம். கொள்ளை அடிக்க முடியுமா? வேறு ஏதாவது செய்ய முடியுமா? பொறுப்பு இல்லாதவர்கள் ஆட்சியில் இருந்தால் ஏதாவது செய்வார்கள்! ஆகையால் உறுப்பினர்கள் தயவு செய்து இவற்றையெல்லாம் தாராளமாக மக்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டும். ஏதோ தேர்தல் வருகிறது, இதைக் கொண்டு ஏதாவது பேசலாம், செய்யலாம் என்று இருக்கக்கூடாது. எல்லோரும் இதில் ஈடுபட்டு இவற்றை விளக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஒரு சின்ன விஷயத்தைக் குறிப்பிட்டுவிட்டு அமர்ந்துவிடுகிறேன். டீ ஒரு பவுண்டுக்கு விலை ரூ. 4.35 ஆக இருக்கிறது. இந்த வரிக்குப் பிறகு ரூ. 4-55 க்கு ஒரு பவுண்டு கிடைக்கும் என்று சொல்லப்படுகிறது. அப்படி வருகிறபோது எத்தனை கப் டீக்கு இந்த 20 நயா பைசா உயர்கிறது? ஒரு பவுண்டுக்கு எத்தனை கப் போடலாம்? 150 கப் போடலாம்.

மிஸ்டர் சேர்மன்: டீக்கு யார் வரி போட்டது? இப்போது இங்கே அதை ஏன் பேசுகிறீர்கள்? The hon. Member will please resume his seat.

திரு. ஏ. சுப்ரமணியம்: 150 கப்புக்கு ஒரு பவுண்டு டீ போட முடியும். ஆகையினால் வரி போட்டது நியாயமாகத்தான் இருக்கிறது. அதிகமாகக் கூடுதலாக வியாபாரிகள் விற்கப்படாதவாறு அரசாங்கம் பார்த்துக்கொள்ள வேண்டும். இந்த வரவு செலவுத் திட்டத்திற்கு பரிபூர்ணமாக ஆதரவு தெரிவித்து வரவேற்கிறேன் என்று சொல்லி முடித்துக் கொள்கிறேன்.

திரு. டி. ஜோகி கவுடர்: தலைவர் அவர்களே, 1963-64 பட்ஜெட்டை வரவேற்றுச் சில வார்த்தைகள் பேசுகிறேன். 4-00 p.m.

நீலகிரியில் உருளைக்கிழங்கு சாகுபடி அதிக மோசம் அடைந்திருப்பதால், உருளைக் கிழங்கு விவசாயம் செய்பவர்களுக்கு கவர்ன்மெண்டிலிருந்து கடன் வாங்கியிருக்கும் தொகையைத் தள்ளுபடி செய்யவேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அரசாங்க சின்கோனா டிபார்ட்மெண்ட்டை விவசாய இலாகாவுடன் சேர்த்தால் அரசாங்கத்திற்கு மேற்பார்வை சிலவு குறைந்து இருக்கும். ஆகையால் இது இரண்டையும் ஒன்றாகச் சேர்த்தால் நலமெனக் கருதுகிறேன்.

குந்தா எலெக்ட்ரிக் டிபார்ட்மெண்டாரால் பூமி இழந்தோர்களில் இன்னும் சிலருக்கு பூமி கொடுக்கப்படவில்லை. ஆகையால் இதை அரசாங்கம் உடனடியாக கவனித்து பூமி கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

நீலகிரியில் பருவநிலை மாறிவிட்டதாலும், விலைபொருள்கள் ஒவ்வொன்றும் கெட்டு விட்டதாலும், நியாய விலைக் கடைகள் மீண்டும் அதிகமாக நடத்த அரசாங்கம் உத்திரவு போடவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஊட்டியில் நடக்கும் கச்சா பிலிம் தொழிற்சாலைக்கு வேலைக்கு ஆட்கள் எடுக்கும்போது, முதல் சலுகை நீலகிரி மக்களுக்கு கொடுக்க அரசாங்கம் உத்தரவு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

நீலகிரியில் சட்டசபைக் கூட்டம் நடத்தப்பட வேண்டும் என்று நீலகிரி மக்கள் சார்பாகக் கேட்டுக் கொண்டு பேச சந்தர்ப் பம் கொடுத்த தலைவர் அவர்களுக்கு எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு இத்துடன் என் உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

(Deputy Chairman in the Chair.)

**திரு. கே. கமலக்கண்ணன் :** மதிப்புக்குரிய உபதலைவர் அவர் களே, இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையை நான் முழு மனதோடு வரவேற்றுப் பாராட்டுகிறேன். அனுபவமும், ஆற்றலும், திறமை யும் வாய்ந்த நமது மாநில அமைச்சரவை இப்பொழுது நாட்டில் ஏற்பட்டுள்ள அவசர நிலை காரணமாக பல புது பொறுப்புகளை ஏற்றுக்கொண்டும், அதே சமயத்தில் அங்கே நிகழக் கூடிய ஆக்கிர மிப்பைச் சமாளிக்கும் வகையில் பல திட்டங்கள் வகுத்து அதற் கும் பெரும் அளவுக்குப் பணம் ஒதுக்கியும், நம் நாட்டின் விவசாயம், தொழில் உற்பத்தி, மின்சாரம், இன்னும் பலதிட்டங் களும் எந்த வகையிலும் குறையாமல் நடத்த வசதி செய்து இருப் பதை நாம் காண்கிறோம். உறைந்து கிடக்கின்ற இமயத்தின் பக்கம் கோடைக்காலம் நெருங்கி வருகின்ற இந்தக் காலத்தில் சமயம் பார்த்து மேலும் ஆக்கிரமிக்கக்கூடிய அண்டை நாட்டு சீனர்களுடைய போக்கைக் கவனிக்க வேண்டிய நிலையில் நாம் இருக்கிறோம். மன வேதனை ஒரு பக்கம் இருந்தாலும், நாம் எல்லோரும் வீர உணர்ச்சியோடு, போர் முனைக்கு தேசியச் சேவைக்குப் போக ஒற்றுமையோடு எந்த வித்தியாசமும் பாராமல் உழைக்க உறுதி எடுத்துக்கொள்ள வேண்டும். நம்முடைய நாட்டில் நாம் சுதந்திரத்துடன் இருக்க, நாட்டைப் பாதிக்கக் கூடிய அளவில் எந்த யுத்தமும் நடக்காத காரணத்தால் கஷ்ட நஷ்டங்கள் என்ன, ஆபத்துக்கள் என்ன என்பதைப் புரிந்து கொள்ளாத நிலையில் மக்களை நாம் காண்கிறோம். முதல் மகா யுத்தத்திலும் இரண்டாவது மகா யுத்தத்திலும் மேலை நாட்டிலும் மற்ற உலக மக்களும் எவ்வளவு பயங்கர அளவில் கொடூரமாகப் பாதிக்கப்பட்டார்கள் என்பதைப் பாதிக்கப்பட்டவர்களுடைய அனுபவங்களைச் சொல்ல நான் கேட்டிருக்கிறேன். ஜெர்மனியில் சென்ற மகாயுத்தத்தில் பெண்கள் 80 சத விகிதம் விதவைகளாகி இருக்கிறார்கள் என்ற ஒரு செய்தி கேட்டிருக்கிறேன். ஆனால் அதிர்ஷ்டவசமாக நம்முடைய நாட்டில் இப்பேர்ப்பட்ட யுத்தங்கள் இதுவரையில் பாதிக்காத அளவில் இருக்கிறது என்பதை நாம் மகிழ்ச்சியோடு காண்கிறோம். அது நம் நாட்டினுடைய ஒரு

6th March 1963] [திரு. கே. கமலக்கண்ணன்]

சிறப்பு. நாம் ஆன்மார்க்கமாக வழி வழியாக வந்த காரணத்தால், ஆண்டவன் நம்மைக் காப்பற்றுகிறுர் என்று தான் நினைக்கிறேன். இப்பேர்ப்பட்ட ஆபத்துக் காலங்களில் நாம் ஒவ்வொருவரும் அந்தப் பொறுப்புணர்ச்சியைக் கவனிக்க வேண்டும். மேலை நாட்டிலிருந்து வந்த ஆங்கிலேயர்கள், இரண்டாவது மகா யுத்தத்தின் போது, தங்களுக்குப் பல வசதிகள் இருந்தாலும் கூட மாதம் ரூ. 3,000, 4,000 சம்பளம் வாங்கின வெள்ளையர்கள், நம்முடைய சென்னையில் கூட, சைகிளில்தான் போய் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய பல வசதிகளையும், அந்த இரண்டாவது யுத்தத்தின் போர் வீரர்களுக்காகத் தியாகம் செய்திருக்கிறுர்கள். நான் நினைக்கிறேன், நம்முடைய மக்கள் கூட அப்பேர்ப்பட்ட தியாகங்களில் இறங்கவேண்டும். ஒவ்வொருவரும் நம்முடைய அன்றாட சாப்பாட்டில் ஒரு வேளையைப் போர் வீரர்களுக்காகத் தியாகம் செய்தாலும் கூட மிக நன்மை என்று நான் நினைக்கிறேன்.

அதிர்ஷ்டவசமாக இப்பேர்ப்பட்ட நெருக்கடியில் கூட நம்முடைய மாகாண அரசாங்கம் புதிய வரி ஒன்றும் விதிக்காமல் நிதி நிலை அறிக்கையைத் தயாரித்திருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. உள்நாட்டு ஒழுங்கையும் சமாதானத்தையும் நிலை நாட்ட வேண்டும் என்று ஆயுதப்படையும், ரிசர்வ் போலீசும், ஊர்க்காவல் படையும், கல்லூரிகளில் இளைஞர்களுக்கு ராணுவப் பயிற்சி, தேசீய மாணவர் படை எழுப்புதல் போன்ற இந்தத்திட்டங்களுக்காக 1962-63-ஆவது ஆண்டில் 6 கோடி 98 லட்சம் செலவழித்து, இந்த ஆண்டில், 1963-64-ல் 8 கோடி 11 லட்சம் ஒதுக்கியிருப்பதை நாம் பார்த்துச் சந்தோஷப்படுகிறேம். இந்தத் திட்டங்களுக்கு இன்னும் அதிகமாக ஒதுக்கவேண்டும் என்று நான் கருதுகிறேன். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கியுள்ள 291 கோடி ரூபாயில் விவசாயம், தொழில் வளர்ச்சி, நீர்ப்பாசனத்திட்டங்கள், கல்வி, மின்சாரம் போன்ற துறைகளுக்கென 195 கோடி ஒதுக்கியிருப்பதை மிகவும் மகிழ்ச்சியோடு வரவேற்கிறேன். இது போதாது; இன்னும் அதிகமாக ஒதுக்கினுலும் கூட, இப்பேர்ப்பட்ட சமயத்தில் ஒரு நல்ல சூழ்நிலையை உருவாக்குவதற்கு நன்மையாக இருக்கும் என்று நான் நினைக்கிறேன். நம்முடைய தேசீய வருமானத்தில் 50 சதவிகிதம் விவசாயத்தின் மூலம் கிடைப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. சென்ற நாலு ஆண்டுகளாக அமெரிக்க விவசாயிகள் ஆண்டுதோறும் நம் நாட்டில் விவசாயப் பணிகளைப் பார்க்க வருகிறுர்கள். அங்கே ஒரு குடும்பத்தில் நாலுபேர் இருந்துகொண்டு, Machines உதவி கொண்டு 300, 400 ஏக்கர்கள் விவசாயம் செய்து உணவுப் பொருள்களை ஒரு பட்டணத்திற்கே ஆகவேண்டிய பெருமளவுக்கு உற்பத்தி செய்கின்றுர்கள் என்று நான் தெரிந்து கொண்டேன். 4-10 p.m.

அப்படி ஒரு சிறந்த முறையில் அவர்கள் விவசாயம் இருக்கிறது. நம் நாட்டில் ஒரு ஏக்கருக்கு 800 பவுண்டுக்கு மேல் விளையவில்லை என்ற நிலைமை இருக்கிறது. அவர்களை விட எவ்வளவோ ஆண்டுகளாக நாம் கலாச்சாரத்திலும், விவசாயத் தொழிலிலும் பண்பட்டவர்கள் என்று நாம் உலகத்தில் கருதப்படுகின்றேம்.

[திரு. கே கமலக்கண்ணன்] [6th March 1963

இருந்தாலும் கூட இந்தக் காரியத்தைச் சற்று கவனிக்க வேண்டியிருக்கிறோம். இப்போது நாம் நடைமுறையில் கொண்டிருக்கும் புதிய திட்டத்தின் காரணமாக, விஞ்ஞான முறைகளின் காரணமாக, ஒரு ஏக்கரில் 1,500 பவுண்டு விளையக்கூடிய அளவுக்கு உற்பத்தியைப் பெருக்க முனைந்திருக்கிறோம். அது கூடபோதாது அமெரிக்காவில் விளைவது போன்று ஒரு ஏக்கருக்கு 3,00 பவுண்டு விளையச்செய்ய அவர்கள் கையாளும் விஞ்ஞான முறை என்ன என்பதைக் கண்டறிந்து அந்த வழியை நாம் பின்பற்ற வேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்தில் நான் என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

கிராம மக்கள் தங்கள் சுய தேவையைக் கூடுமான வரையில் தாங்களே உற்பத்தி செய்து கொள்ள கிராமப் பஞ்சாயத்துக்களுக்கும், பஞ்சாயத்து யூனியன்களுக்கும் பெரும் பொறுப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. விவசாயத்துறையில் பெருமளவுக்கு வெற்றி கண்டிருக்கிறோம். இந்த ஆண்டு பட்ஜெட்டில் குடி தண்ணீர் வசதிக்கு 1 கோடியே 40 லட்சம் ரூபாயும், இணைப்புச் சாலைகள் அமைக்க 1 கோடியே 29 லட்சம் ரூபாயும், பள்ளிக்கூடக் கட்டிடங்களுக்கு 30 லட்சம் ரூபாயும் ஒதுக்கியிருப்பதைக் காண்கிறோம். ஆனால் பள்ளிக்கூடக் கட்டிடங்கள் இடிந்த நிலையில் இருக்கின்றன. அப்படிப்பட்ட கட்டிடங்களைப் புதுப்பிக்கவும், இன்னும் புதிய பள்ளிக்கூடக் கட்டிடங்கள் கட்டவும் 30 லட்சம் ரூபாய் போதாது என்று நினைக்கிறேன். எனக்கு முன்னால் பேசிய அங்கத்தினர்கள் கூட இந்த விஷயம் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே அந்தக் கட்டிடச் செலவுக்கு ஓரளவு இந்தத் திட்டத்தை அரசாங்கம் உருவாக்கினால் அது மிக்க நன்மையாக இருக்குமென்று நான் நினைக்கிறேன்.

அடுத்து, மீன் வள அபிவிருத்தி பற்றி ஓரிரு வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கிராம மக்களுக்கு மீன் மிக அவசியமான உணவுப் பொருள் என்னும் நிலையில், கிராமங்களில் உள்ள பொதுக் குளங்கள், குட்டைகள், கிணறுகள், ஏரிகள் ஆகியவற்றில் மீன் வளர்க்க இலவசமாக வேண்டிய வசதிகளைச் செய்ய ஒரு திட்டத்தை அரசாங்கம் உருவாக்கினால் அது மிக்க நன்மை அளிக்குமென்று நினைக்கிறேன்.

கூட்டுறவுத் திட்டத்தின் அடிப்படையில் கிராம மக்களுக்கு இந்த நெருக்கடி நேரத்தில் நியாய வட்டிக்குக் கடன் கொடுக்கத் திட்டமிடப்பட்டிருப்பது வரவேற்கத்தக்கதாகும். கிராம மக்களுடைய குறை என்னவென்றால், அவர்கள் அரசாங்கக் கூட்டுறவுத் துறையின் மூலமாக கடனுக்கு விண்ணப்பம் போடும் போது, கடன் தொகை அவர்கள் கோருகிற தேதியில் கிடைக்காமல் இருக்கிறது. இந்தக் குறையைப் பலர் என்னிடம் கூறியிருக்கிறார்கள். இதை அரசாங்கம் கொஞ்சம் கண்காணித்து, இந்தக் குறையை நீக்கினால் நன்மையாக இருக்குமென்று நான் நினைக்கிறேன். இப்பேர்ப்பட்ட அவசர காலங்களில், சீனர்கள் இந்தியா மீது ஆக்கிரமிப்பு செய்திருக்கிற காலத்தில், வியாபாரிகள் இந்தச் சந்தர்ப்பத்தை பயன்படுத்திக்கொண்டு Black-market

செய்யும் நிலை ஏற்பட்டிருக்கிறது. இதே மாதிரி நிலையை முதல் மகாயுத்தத்தின்போதும், இரண்டாவது மகாயுத்தத்தின்போதும் நாம் கண்டிருக்கிறோம். இந்த அவல நிலை அதிகரிக்காமல் இருக்க நியாய விலைக்கடைகளைக் கிராமங்களில் ஏற்படுத்தி அவற்றைக் கூட்டுறவுச் சங்கங்களின் பொறுப்பில் விட்டு, நியாய விலைக்கு நல்ல பொருள்கள் கிராம மக்களுக்கு கிடைக்கச் செய்ய ஒரு திட்டத்தை அரசாங்கம் உருவாக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கட்டிட சம்பந்தமான செங்கல், சிமெண்டு, இரும்புச் சாமான்கள் கிடைக்காத அளவில் பலர் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இதனால் பல கட்டிடங்கள் கட்டப்பட்டு, முடிக்கப்படாமல் அந்த நிலையிலேயே விடப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். இப்படிப் பட்ட நிலை இல்லாமல், அப்படி விட்டிருப்பவர்களுக்கு மட்டுமாவது முடிந்த அளவில் 'First priority' கொடுத்து, வேண்டிய சாமான்கள் கிடைக்க வசதி செய்து கொடுத்தால், மிக நன்மையாக இருக்குமென்று நான் கருதுகிறேன்.

சமீபத்தில் இரண்டு, மூன்று நாட்களுக்கு முன்பு நான் தினச் செய்தியில் கண்டேன். கிருஷ்ணா கோதாவரி நதிகளின் தண்ணீரை சென்னைக்குக் கொண்டு வரும் திட்டத்தை, ஆந்திர முதலமைச்சர் அவர்கள் ஒத்துக் கொண்டுவிட்டார்கள் என்று படித்தேன். இது நல்ல சந்தர்ப்பம். இந்த நெருக்கடி நேரத்தில் அதைப் பயன்படுத்தி, சென்னைக்குத் தண்ணீர் கொண்டு வரும் திட்டத்தில் அரசாங்கம் முன் வந்து வட ஆற்காடு, செங்கற்பட்டு போன்ற எந்தக் காலத்திலும் வரண்டிருக்கிற ஜில்லாக்களுக்கு இந்தத் தண்ணீர் பயன்படக் கூடிய அளவில், உடனடியாக கோதாவரி-கிருஷ்ணா தண்ணீரைக் கொண்டு வந்தால் மிக நன்மையாக இருக்குமென்ற என்னுடைய தாழ்மையான அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நமது சென்னையில் போக்குவரத்து வண்டிகள் அதிகமாகி விட்டதால், பல விபத்துக்கள் ஏற்படுவதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். Heart of the City -ல் சென்னை நகரத்துக்கு மத்தியில் Mufassal பஸ் ஸ்டாண்டு வைத்திருப்பதால் மக்களுக்குத் தொல்லையாக இருக்கிறது, இந்த பஸ் ஸ்டாண்டைச் சென்னையின் எல்லையோரத்தில் அமைப்பதோடு, மூன்று பஸ் ஸ்டாண்டுகளாக, சென்னைக்குத் தெற்கே, மேற்கே, வடக்கே ஏற்படுத்தினால், நெருக்கடியை ஓரளவுக்குச் சமாளிக்க முடியும். மக்களுக்கும் ஓரளவுக்கு இந்தத் தொந்திரவு நீங்கும் என்று சொல்லி முடிக்கிறேன்.

(Mr. Chairman in the Chair.)

**திரு. எம். எஸ். மஹாராஜ பிள்ளை :** தலைவரவர்களே, தமிழ் நாட்டு பட்ஜெட்டை நாமெல்லோரும் வரவேற்று, ஆதரிக்கக் கூடிய நிலையில் இருந்த போதிலும் கூட, மத்திய சர்க்காரின் பட்ஜெட்டைப் பற்றி நாம் இங்கு பேசக்கூடாது என்று சொல்லக்கூடிய நிலைமை இருந்தாலும் கூட, Sound box குரல் எந்த அளவுக்கு இருக்கிறதோ அந்த அளவுக்கு தெரிவிக்கிற நிலையில் இருக்கிறேன்.

[திரு. எம். எஸ். மஹராஜ பிள்ளை] [6th March 1963

நாடு இன்று இருக்கக் கூடிய நிலைமையில் எல்லா அரசாங்கமும் நாட்டைக் காப்பாற்ற மக்களுக்கு வரி போட்டுத்தான் ஆக வேண்டுமென்பது உண்மைதான். ஆனாலும் ஒரு சில வரிகள், மத்திய சர்க்காரின் வரிகள் மக்களைப் பாதிக்கிறது என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகின்றேன். குறிப்பாக இந்த சேமிப்பு வரி, ஏழை எளியவர்களை, மத்தியதர வகுப்பை அதிக மாகப் பாதிக்குமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். விவசாயிகள், ஒரு சில வீடுகள் வைத்திருப்பவர்கள், குறைந்த சம்பளம் உள்ளவர்கள், 10 சதவிகிதம் என்றும், தீர்வையில் 50 சத விகிதம் என்றும் சேமிப்பில் பணம் செலுத்த வேண்டுமென்றால், அது அவர்களைப் பெரிதும் பாதிக்கும். இந்த சேமிப்பு திட்டமானது அவர்களுடைய அன்றாட வாழ்க்கையைப் பாதிக்கக்கூடிய நிலையில் இருக்கிறது என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இங்கு நாம் அதைப்பற்றி சர்ச்சை செய்து ஒரு முடிவுக்கு வர முடியாவிட்டாலும் மத்திய சர்க்காருக்கு நம்முடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

குறிப்பாக, விவசாயிகள், நிலம் வைத்திருப்பவர்கள் இப்போது நெல் விலையின் இறக்கத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். கோட்டை ஒன்றுக்கு 15 ரூபாய் நெல் விலை இப்போது இறங்கியிருக்கிறது. 5 ரூபாய் இறங்கியிருந்தால், அது வாங்குகிறவர்களுக்கும், விற்பவர்களுக்கும் பாதிக்காத நிலை இருந்திருக்கும். 15 ரூபாய் இறங்கியிருப்பது பெரிதும் பாதிக்கக் கூடிய நிலையில் இருக்கிறது. உற்பத்திச் செலவோ நாளுக்கு நாள் கூடிக் கொண்டிருக்கிறது. ஒரு ஏக்கர் நிலத்துக்கு 240, 250 ரூபாய் வரை செலவாகிறது. வருமானத்தைக் கணக்கிட்டால் சுமார் 500 ரூபாய்க்குள் தான் அந்த நிலத்திலிருந்து வருமானம் எதிர் பார்க்கமுடிகிறது, 16 அணா விளைச்சல் என்று வைத்தாலும் கூட. ஆகவே இதிலிருந்து அவர்கள் செலவு, மற்றதை எடுத்துக் கொண்டு, சேமிப்புக்கும் பணம் ஒதுக்க முயல்வது என்றால் அது பெரிதும் கஷ்டமென்று மீண்டும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

4-20 p.m.

விவசாய நிலங்களுக்கு இப்போது நாம் தீர்வைகளை, இந்த பட்ஜெட்டில் அல்லாத முறையில், கூட்டியிருந்தாலும் கூட, நகர சபை எல்லையில் உள்ள நிலங்களுக்கும், பஞ்சாயத்து எல்லையில் உள்ள நிலங்களுக்கும் 50 சதவிகிதம் மேலும் விதிக்கலாம் என்ற முறை இருந்து வருகிறது. செஸ் விதிப்பது நமக்குப் புதிது அல்ல. நகரசபை எல்லையில் உள்ள நிலங்களுக்கு 50 சத விகிதம் தீர்வையில் வரி விதிக்கலாம் என்பது முன்பே இருந்து வந்திருக்கிறது. அதை இப்போது பஞ்சாயத்து எல்லையில் உள்ள நிலங்களுக்கு விஸ்தரித்திருக்கிறார்கள். ஆனால் இந்த வரி விதிப்பு ஒரே விதமாக இல்லாமல், அந்தந்தப் பஞ்சாயத்துக்கள் அவர்களுடைய பற்றுக் குறைக்கு ஏற்றாற்போல் கூடுதல் வித்தியாசத்தில், இந்த செஸ்ஸை விதித்து வருகிறார்கள். சில இடங்களில் கூடுதலாகப் பாதிக்கக் கூடிய நிலையில் இருக்கிறது. ஆகவே, அரசாங்கம் ஒரே அளவில் செஸ் விதிக்க வேண்டுமென்று நிர்ணயித்தால், ஒரு சங்கடமும் இல்லாமல் இருக்குமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

6th March 1963] [திரு. எம். எஸ். மஹராஜ பிள்ளை]

அடுத்தபடியாக, நகராட்சியினுடைய ஒரு பிரதிநிதியாக இங்கு நான் வந்திருக்கிற முறையில், அதைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். டோல் காம்பன்சேஷன் என்று நகராட்சி தோன்றிய காலத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகையை நகராட்சிக்குக் கொடுத்துவருகிறது. பின்னால் ஏதோ சிறிய அளவில் தொகையைக் கூட்டிக் கொடுத்து வருகிறார்கள். முதலாவது கிரேடு முனிசிபாலிடிகளுக்கு 25 ஆயிரம், 30 ஆயிரம் என்று டோல் காம்பன்சேஷன் கொடுக்கப்பட்டு வருகிறது. நீண்ட காலத்திற்கு முன்னால், அனுமதிக்கப்பட்ட தொகை அது. இப்போது அது காணாது. டோல் காம்பன்சேஷனிலிருந்து அரசாங்கத்திற்கு வருமானம் கூடுதலாக வருகிறது என்பதால், அரசாங்கம் நகராட்சிக்குப் பல ரோடுகளை ஏற்று நடத்தலாமென்று அதற்காக பாதி மானியமாகவும் பாதி கடனாகவும் கொடுத்து வருகிறார்கள். ஆனால் நடப்பு ஆண்டிலிருந்து அந்தத் தொகையைக் குறைக்கப் போவதாகவோ அல்லது நிறுத்தப் போவதாகவோ பேச்சு வருகிறது. அதைக் குறைக்கக் கூடாது. அதைக் கூட்டிக்கொடுக்கவேண்டுமென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். நகராட்சி நிர்வாகத்தில் இப்போது அர்பன் ஏரியா டாக்ஸ் விதித்திருக்கிறோம். அதில் நல்ல வருமானம் வருவதை நாம் அறிவோம். அதற்குத் தமிழ்நாடு அரசாங்கம் எவ்வளவு கொடுக்கப்போகிறது என்பது குறிப்பாக இல்லை. குறிப்பாக நகராட்சி அங்கங்கே ஒரு நல்ல இண்டஸ்ட்ரீயை ஏற்படுத்துவதன் மூலம், காலனிகள் ஏற்படுத்துவதன் மூலம் நகராட்சியின் எல்லையிலுள்ள நிலத்தின் விலை உயர்ந்து வந்திருக்கிறது. இப்போது மகசூல் கிடைக்கக் கூடிய முறையில் வருமானம் வரக்கூடிய நோக்தில் நகராட்சிக்கு எந்தவிதமான பங்கும் அதில் இல்லாமற் போய்விடுமோ என்று அஞ்சவேண்டிய நிலையில் இருக்கிறது. நகராட்சியின் பகுதியை எந்த விதத்தில் கூடுதலாக்கலாம் என்று யோசனை இருந்துவருகிறது. இந்த அர்பன் ஏரியா டாக்ஸ் இன்று நகரவாரி எல்லை நிலங்களிலுள்ள காலி நிலங்களுக்கு விதிக்கக்கூடிய வரியிலிருந்து எண்டர்டைன்மெண்ட் டாக்சில் 10 சதவிகிதம் எப்படி எடுத்துக் கொண்டு கொடுக்கிறார்களோ அதுபோல நகராட்சிக்கு இதைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நகராட்சியில் நகர சீரமைப்பு இலாகாவுக்கு டைரக்டர் இருந்து வருகிறார்கள். அரசாங்கத்தினுடைய ஆட்சிக்கு உட்பட்ட அதிகாரி அவர், ஆனாலும் கூட இது ஒரு வியாபார ரீதியில் இயங்கி வருகிறது என்று தெரிகிறது. நகராட்சியில் 200, 300 எக்கர் விஸ்தரிப்புள்ள நகரத்திட்டங்களை அமைக்க முயற்சித்து நகராட்சிகளே பல திட்டங்கள் எடுத்து நடத்த அரசாங்கம் ஊக்குவித்து வருகிறார்கள். நகராட்சிகளும் அப்படிப்பட்ட திட்டங்களுக்கு பல ஆயிரக் கணக்கான ரூபாய்கள் கடனாகக் கொடுத்து வருகிறது. ஆனால் இந்தக் கடன் டவுன் பிளானிங் டைரக்டர் ஸோனல் டாக்ஸ் என்று ஒதுக்கி ஒன்றுக்கு பத்து ரூபாய் விதம் கடன் கொடுத்து திருப்பி வாங்குகிறார்கள். அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இருக்கிறபடியால், இதைப் பொதுவாக ஒரு திட்டம் தயாரித்து கொடுக்கிறார்கள். ஒரு நகராட்சியில் டவுன் பிளானிங் ஆபீசர் இருக்கிறார்.

அவர்களே இந்தத் திட்டத்தை தயாரித்து ஜாயிண்ட் டைரக்டர் அதை ஒப்புறுதி பெற்றுக்கொள்ளலாம். ஏக்கருக்கு 10 ரூபாய் என்றால், பல ஆயிரக்கணக்கான ரூபாய் நகராட்சிக்குக் கொடுக்க வேண்டியிருக்கிறது. இதை நல்லமுறையில் பகிர்ந்து நகராட்சி கூடுதலாக பாதிக்கப்படாமல் கொடுக்க வழி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நகராட்சியில் சில நகராட்சிகளுக்குக் கடனாகவும் மானியமாகவும் தண்ணீர்த் திட்டங்களுக்காகக் கடன் கொடுத்திருக்கிறார்கள். மானியமும் கொடுத்திருக்கிறார்கள். குறிப்பிட்ட வருஷத்தில் அந்த வேலைகள் முடிவு பெறாமல் இருந்துவிடுகின்றன. முடிவு பெறாமல் இருப்பதற்கு நகரமன்றத் தலைவரோ அதில் உள்ள அதிகாரிகளோ பொறுப்பில்லை. அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட அதிகாரிகள்தான் அதற்குப் பொறுப்பாக இருக்கிறார்கள். குறிப்பிட்ட காலத்தில் வேலை முடியவில்லை என்பதால், கடனும் மானியமும் ரத்து செய்யப்படுமென்று சொல்லப்படுகிறது. குறிப்பாக எடுத்து நடந்து கொண்டிருக்கிற வேலைகள் முடிவுபெறாமல் இருக்கின்றன. பாளையம் கோட்டை நகராட்சியில் கூட முடிவுபெறாத வேலைகள் இருக்கின்றன. 26 லட்சம் கடனாகவும் மானியமாகவும் கொடுத்ததில் 20 லட்சம் செலவு ஆகி ஆறு லட்சம் மீதமிருக்கிறது. பாக்கியுள்ள வேலை முடியக்கூடிய நிலையில் இருக்கின்றது. ஆகையால், நகராட்சித் தவறுகளைப் பொருட்படுத்தாமல், தஅற்காக ஒதுக்கி வைக்கப்பட்ட தொகையை அதற்காகச் செலவு செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன். நகராட்சித் திட்டங்களுக்கு டிரைனேஜ் அவசியமாக இருக்கிறது. டிரைனேஜ் ஏற்படுத்தாவிட்டாலும் கூட, அவர்களுக்கு நல்ல வருமானம் ஏற்படக் காரணம் இருக்கிறது. கண்டோன்மெண்ட் எரியா என்று சொல்லக்கூடிய இடங்களில் டிரைனேஜ் இல்லாமல் பாதிக்கப்படுகிறார்கள். தொத்துநோய்கள் புரொடக்டெட் வாட்டர்-சப்ளை இருந்தும் கூட அதிகமாகப் பரவ ஏதுவாக இருக்கிறது. ஆகையால் நகராட்சிக்கு டிரைனேஜ் அவசியம் தேவை. அதற்கு பல ஏக்கர்களை சூயேஜ் ஃபார்மேஷம் செய்ய வாய்ப்பு இருக்கிறது. நகராட்சியின் வருவாயை அதற்காகக் கூட்டிக்கொள்வதற்கான வாய்ப்பும் இருக்கிறது. புதுக்கோட்டையில் 15 ஏக்கர் சூயேஜ் கட்டி 25 ஆயிரம் மிச்சமாக இருப்பதாக அவர்கள் வெளியிட்ட ஒரு சாவனிரில் காட்டியிருக்கிறார்கள். மதுரையில் அப்படியே மிச்சமாகியிருக்கிறது. குறுகிய காலத்தில் சூயேஜ் ஏற்படுத்தினால், அவர்களுடைய வருவாயிலிருந்தே அதைத் திருப்பிக்கொடுக்க வசதியிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அரசாங்கத்தினுடைய பட்ஜெட் அறிக்கையில் ஏழை எளிய தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கு கல்வித் திட்டத்திற்காகவும், வயது முதிர்ந்தோர் பென்ஷனுக்காகவும் கூடுதலான தொகை ஒதுக்கியிருக்கிறார்கள். அதை எல்லோரும் வரவேற்பார்கள். ஆனால் இந்த கல்வித் திட்டத்திற்காகச் செலவிடப்படுவதும் வயது முதிர்ந்தவர்கள் வாங்கக்கூடிய பென்ஷன் திட்டமும் சீர்கேடான முறையில் நடைபெறுகின்றன. இதை நல்ல முறையில் கவனித்து அதற்கு ஆவன செய்து அதை ஒழுங்கான முறையில் செலவு செய்ய வழிசெய்யவேண்டுமென்று சொல்லிக்கொள்ள

6th March 1963] [திரு. எம். எஸ். மஹாராஜ பிள்ளை]

ஆசைப்படுகிறேன். பென்ஷன் ஸ்கீம் மூலம் ஆசிரியர்களுக்கு இப்போது புதிதாகக் கொடுத்து வருகிறார்கள். வரவேற்கக் கூடியதே. நகர மன்றத்தில் வேலை பார்க்கக்கூடிய ஆசிரியர்கள் இந்த பென்ஷன் ஸ்கீமில் வருகிறார்கள். ஆனால் அதே முறையில் நகராட்சியில் வேலைபார்க்கும் குமாஸ்தாக்களுக்கோ மற்றவர் களுக்கோ பென்ஷன் ஸ்கீமோ மற்ற வைத்திய வசதியோ இல்லை. ஒரே அதிகாரத்தின் கீழ் வேலை பார்க்கும் ஒரு சிலருக்கு மட்டும் அரசாங்கத்தினுடைய நன்மைகளைப் பெற வாய்ப்பும் மற்றவர் களுக்கு அது பயன்படாத நிலைமையும் இருந்துவருகிறது. ஆகவே அரசாங்கம் நல்ல முறையில் இதைப் பரிசிலித்து நகராட்சி யில் வேலை பார்க்கும் ஒவ்வொரு சிப்பந்தியும் அரசாங்கத்தின் நன்மைகளைப்பெறவும் பென்ஷன் ஸ்கீமில் இடம் பெறவும் வாய்ப்பு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனக்குப் பேச வாய்ப்பளித்ததற்கு நன்றி தெரிவித்து என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

திரு. எஸ். ஜெயராம ரெட்டியார் : தலைவர் அவர்களே, நமக்கு இங்கே சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் வரவு-செலவுத் திட்டத்தின் கீழ் ஒரு சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இந்த வருஷம் நமது நிதியமைச்சர் அவர்கள் சென்ற 20, 25 ஆண்டுகளாக பல துறைகளில், அநேகமாக ஏதாவது ஒரு துறையில் அனுபவம் இல்லை என்று சொல்லக்கூடாது என்ற நிலைமையில், எல்லா நிர் வாகத் துறைகளிலும் மிகுந்த அனுபவம் வாய்ந்தவராக, நமக்கு முன்னாலே இந்த நிதி அறிக்கையைச் சமர்ப்பித்திருக்கிறார்கள். ஆகையினால் அவர் முழு அனுபவத்துடன் சமர்ப்பித்திருக்கும் ஒரு அறிக்கையின் மீது அபிப்பிராயம் சொல்லுவது என்பது கொஞ்சம் கஷ்டமாகவே இருக்கிறது. ஏனென்றால் நம்முடைய தொழிலமைச்சர் ஒரு பாராவில் சொல்லி இருக்கிறார். " சாதாரண மாக இந்த Administration Establishment charges என்று ஒரு Item -லே, பழக்கமாக அதைக் குறைக்க வேண்டும் என்று சொல்லு கிறார்கள் " என்று சொல்லியிருக்கிறார்கள். அதிலிருந்து என்ன தோன்றுகிறது என்று சொன்னால், ஏதாவது சொன்னால் புதிதாக என்ன சொல்லுகிறீர்கள், எங்களுக்குத் தெரியாதா என்று தொனிக்கின்ற மாதிரி இருக்கிறது. ஆகையினால் ரொம்ப அனு பவம் இருக்கக்கூடிய ஒரு அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த அறிக் கையின்மேல் அபிப்பிராயம் சொல்லுவது என்றால் கஷ்டமாகத் தான் இருக்கிறது. எங்களுக்கு அனுபவம் குறைவுதான். வெளியே பேசப்படுகின்ற விஷயங்கள் எங்களுக்குத்தான் முழு வதும் தெரியவருகின்ற படியால், அவற்றில் சிலவற்றை இங்கே சொல்லித்தானாகவேண்டும். சொல்லுகிறேன் என்றால் ஒரு நல்ல நோக்கத்துடன்தான் சொல்லுகிறேன் என்பதைச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். 4-30 p.m.

முதலாவதாக, இந்த வரவு-செலவுத் திட்டத்தில் இரண்டு கோடியே 74 லட்சம் துண்டு விழுகிறது. Sales Tax-ஐக் காமதேனு மாதிரி என்று சொல்லுவார்கள். நமது முன்னாள் நிதியமைச்சர் கோபால் ரெட்டி அவர்கள் இதைக் காமதேனு

[திரு. எஸ். ஜெயராம ரெட்டியார்] [6th March 1963

என்றுதான் குறிப்பிடுவார்கள். நான் ஒரு வியாபாரி என்ற முறையில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். **Sales Tax** நாளாவட்டத்தில் நல்ல வளர்ச்சிதான் அடைந்து வந்திருக்கிறது. அதைச் சரியான முறையில் அமுல் செய்தால், இன்னும் அதிகம் வரும் என்பது என்னுடைய அபிப்பிராயம். பல துறைகளிலே அங்கே நடக்கின்ற விஷயத்தால், **Sales Tax**-ஐ மறந்தே வியாபாரம் செய்யவேண்டிய நிலைமையில் நாங்கள் இருக்கிறோம். வியாபாரம் என்ற முறையில் அதைச் செய்யாமல் முடியவில்லை. மறைத்துத்தான் ஆகவேண்டியதாக இருக்கிறது. எல்லோரும் திருடனாக இருந்து ஒருவன் மட்டும் யோக்கியனாக இருந்தால், அந்த ஊரில் இருக்கமுடியாது. அந்த வியாபாரம் பண்ணித்தான் ஆக வேண்டியதாக இருக்கிறது. தொழிலில் இருக்கிறவர்கள் நாங்கள். சர்க்காரை நடத்துகின்ற அதிகாரிகள் முன்பைவிட இப்பொழுது திறமையுடன்தான் நடத்துகிறார்கள். இன்னும் கொஞ்சம் திறமையாக நடத்தினால், எங்களுக்கும் கொஞ்சம் யோக்கியமாக இருக்க சந்தர்ப்பம் கிடைக்கும், உங்களுக்கும் வரி அதிகமாக வரும். அதனால் இந்த முறையில், நான் நினைக்கின்ற இந்த **Item**-லே மாத்திரம் கொஞ்சம் கண்காணிப்பாக இருந்தால் ரொம்ப ரூபாய் வரும் என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இதற்கு மேலே நான் சொல்லுவது நல்லதாக இருக்காது.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கனம் அங்கத்தினர் மிகுந்த அன்போடு எனக்கு ரொம்ப அனுபவம் இருப்பதாகச் சொன்னார். என்ன இருந்தாலும் இந்த விஷயத்தில் அனுபவம் கிடையாது. என்னைவிட கொஞ்சம் அதிகம் அனுபவம் இந்த விஷயத்தில், கனம் அங்கத்தினருக்கு இருப்பதாகத் தெரிகிறது. ஆகையினால் இதோடு நிறுத்திக் கொள்ளாமல், குறிப்பாக அவருடைய யோசனைகளைச் சொல்லவேண்டும்.

**திரு. எஸ். ஜெயராம் ரெட்டியார்:** நான் என்னுடைய அனுபவத்தில் சில யோசனைகளைப் பொதுவாகச் சொன்னால் நல்லதாக இருக்காது. என்னுடைய யோக்கியதையை இப்பொழுதே நீங்கள் குறைவாக நினைத்துவிடுவீர்கள். அதனால் அமைச்சர் அவர்களிடம் தனியாகச் சொல்ல வேண்டுமென்று இருந்தால் சொல்லிக் கொள்ளுகிறேன்.

இரண்டாவதாக, நம்முடைய மாகாணத்திலே தொழில் அமைச்சருடைய மிகுந்த பிரயாசையாலே வழக்கத்திற்கு மாறாக பண உதவி செய்து, **Industrial Finance Corporation** மூலமாக, தனியார் துறையில் ஏராளமாகப் பண உதவிசெய்து, ஊக்கம் கொடுத்து இந்த மாகாணத்தில் பலதொழில்களை ஏற்படுத்துவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இதிலே ரொம்ப பணம் கொடுத்துவிட்டார்கள், இங்கே கொடுத்துவிட்டார்கள் அங்கே கொடுத்துவிட்டார்கள் என்று சொல்ல சந்தர்ப்பமும் இருக்கிறது. திட்டத்திற்கு மேலாகக்கூட கடன் கொடுத்து ஊக்கம் கொடுத்திருக்கிறார்கள். அப்படி கொடுக்கின்றபோது எந்த இடத்தில் கொடுத்திருக்கிறோமோ, அந்த ஸ்தாபனத்தில் போட்டிருக்கிற பணம்

6th March 1963] [திரு. எஸ். ஜெயராம ரெட்டியார்]

நன்ருக இருக்கிறது நம் காதில் விழவேண்டும். சாதாரணமாக Share இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். ஒரு Share விலை 10 ரூபாய் என்று வைத்துக் கொள்ளுங்கள். அதிலே ஏராளமான மூலதனங்கள் போட்டிருக்கிரும் என்ருல், அது நல்லபடி நடக்கிறது என்ருல் share விலை ஏற வேண்டும். அப்பொழுதுதான் பணம் போட்டத்திற்கு நல்ல பெயர் இருக்கும். எங்களிடம் ரூபாய் வாங்கி இருக்கிருர்கள். பொது ஜனங்களிடம் Share -விலை குறைவாக இருக்கிறது' என்று சொல்ல இடம் இருக்கக்கூடாது. 'எங்களைப்பற்றிப் பேச இடம் இருக்கக் கூடாது' என்று கண்டிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளு கிறேன். என் காதில் விழுகிறது என்பதைத்தான் சொல்லு கிறேன். நானுக ஒன்றும் சொல்லிக்கொள்ளவில்லை. அந்தத் தொழிலில் தொடர்பு உள்ளவர்கள் சொல்லிக்கொள்ளுகிருர்கள். இதிலே 40 லட்சம் போச்சு, அதிலே போச்சு என்று மார்க்கெட் டிலே பேசிக்கொள்ளும் சந்தர்ப்பம் இருப்பதாலேதான் நான் சொல்லுகிறேன். நான் சொல்லுவதை நல்லெண்ணத்தில் கவனிக்கவேண்டுமே தவிற, குற்றம் சொல்லுவதாக எடுத்துக் கொள்ளக்கூடாது. அங்கே மந்திரிகளைப் பற்றிக் குற்றம் யாராவது சொன்னுல் நான் விடுவதில்லை. அதிலே கொஞ்சம் கண்காணிப்பாக இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

பொதுவாக கல்வி விஷயமாக ஒரு சில வார்த்தைகள் சொல்ல பிரியப்படுகிறேன். இது ஆரம்பக் கல்வி விஷயம். சமீபத்திலே நானும் கனம் ராஜா அய்யர் அவர்களும் ஒரு பள்ளி விழாவுக்குப் போய் இருந்தோம். அந்த இடத்தில் 400 பிள்ளைகள் படிக்கிருர் கள். அதிலே 4, 5 பிள்ளைகள்தான் சம்பளம் கொடுக்கிருர்கள் என்று ஆண்டு அறிக்கையில் படித்தார்கள் அதற்கு நான்கு தினங்களுக்கு முன்பு நமது முதலமைச்சர் அவர்கள் நம் பக்கம் வந்திருக்கிறபோது இதைப்பற்றிச் சொன்னுர்கள். இந்த School Fees Concession -ஐ என்னைப் போன்றவர்கள் கூட வாங்கி விடுகிருர்கள். சாதாரண உபாத்தியாயர்கள், மாதச் சம்பளம் வாங்குகிறவர்கள், வருமானத்தை ஒளிக்க முடியாமல் இருக்கிறவர் கள், அவர்களிடம்தான் சம்பளம் வாங்குவது. மாதச் சம்பளம் வாங்குகிறவர்களைத் தவிர மற்ற எல்லோரும் இந்த Concession-ஐ வாங்கிவிடுகிருர்கள். கணக்கு எடுத்துச் சொல்ல முடியும். எல்லோரும் கள்ளக் கணக்கே கொடுத்துக்கொண்டிருக்கிருர்கள். எல்லோருக்கும் இல்லை என்று பண்ணி விடலாம் என்று நினைக் கிறேன். முதல் அமைச்சர் அவர்களும் அப்படியே செய்து விடலாம் என்று நினைக்கிறேன் என்று சொன்னுர்கள். 400 பிள்ளைகள் இருக்கிற இடத்தில், 5, 6 பேர்தான் கொடுக்கிருர்கள். இதிலிருந்து வருமானம் ஒன்றும் நாம் பெறப்போவதில்லை. இதைக் கல்வி அமைச்சர் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். ஆவன செய்வார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக Training School சம்பந்தமாக Technical Education இருக்கிற இடத்தில் கமிட்டி போட்டு நடத்து

கிறார்கள். **Private School** எல்லாம் ஒரு வியாபாரம் போல் இருக்கிறது. 200 ரூபாய் 300 ரூபாய் **Admission** -க்காகக் கேட்கிறார்கள். இது ஒரு **Traffic** மாதிரி இருக்கிறது. இதைக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். பெரிய மடாதிபதிகள்கூட செய்கின்றார்கள் என்று கேள்விப்படுகிறேன்.

கடைசியில், நமது சென்னையில் இருக்கிற **Transport Service** -ஐப் பற்றி மொத்தம் 660 பஸ்கள் இருக்கின்றன. எனக்கு பஸ் விஷயமாக சில தோழர்களோடு தொடர்பு உண்டு. சாதாரணமாக **Income-tax Department**-ல் எல்லா செலவும் போக இப்பொழுது இருக்கிற நிலையில் ரூ. 8,000 கணக்கு போட்டு இன்கம்டாக்ஸ் வசூல் செய்கின்றார்கள். கணக்கை நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி **Flat rate** - ஆகப் போட்டு விடுகிறார்கள். நமது நகர் **Bus Transport** -க்கு ஜாஸ்தி வருமானம் கிடைக்க வேண்டும் என்பது நிச்சயமாகத் தெரியவேண்டும். இதைவிட இரண்டு மடங்கு வருவதற்குச் சந்தர்ப்பம் இருக்கிறது. இதிலே கொஞ்சம் கண்காணிப்பு வைத்து வருமானத்தைப் பெருக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மொத்தத்தில் நிர்வாகத்தில் எல்லா மாகாணங்களையும் விட நாம் சிறந்த முறையில் நடத்துகிறோம் என்று பெயர் வாங்கி இருந்தாலும், இன்னும் சிறந்த முறையில், இன்னும் சிக்கனமாக நடத்த முடியும், நமக்கு ஊக்கம் இருக்கிறது, அறிவு இருக்கிறது என்பதை ஞாபகப்படுத்திக்கொண்டு என் பிரசங்கத்தை முடித்துக்கொள்ளுகிறேன்.

4-40 p.m. **திரு. டி. வி. தேவராஜ முதலியார்:** கனம் தலைவரவர்களே, 1963-64-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையை முழு மனதுடன் ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன் நமது அமைச்சரவர்கள் அன்பு அறிவு, ஆற்றல் மூன்றையும் செலுத்தி இந்த நிதிநிலை அறிக்கையைத் தயாரித்து சபையில் நன்கு சமர்ப்பித்திருக்கிறார். இது எல்லா வகையிலும் மக்களின் முன்னேற்றத்திற்கு வழி கோலக் கூடிய ஒரு அறிக்கையாகும். இப்போது இந்த அறிக்கை எப்படி இவ்வளவு புனிதமாக அமைந்தது என்பதைச் சொல்ல ஆசைப்படுகிறேன். ஒரு மனிதனிடத்தில் படிப்பு இருக்கலாம்; ஆனால் பணம் இருக்காது. பணம் இருக்கலாம், படிப்பிருக்காது. பணமும், படிப்பும் ஒரு மனிதனிடம் சேர்ந்திருக்குமேயானால், அதைத்தான் சொல்லுவார்கள் லட்சுமியும், சரஸ்வதியும் ஒன்று சேர்ந்துவிட்டார்கள் என்று. 100-க்கு ஒருவர், இருவரிடத்தில்தான் அப்படி ஒன்று சேர்ந்திருக்கும்; 90 பேரிடம் சேர்ந்திருக்காது. அப்படி நாம் பார்க்கின்றபோது, எந்த மாகாணத்திலாவது, நிதியும், கல்வியும், நிதி இலாக்கா பொறுப்பும், கல்வி இலாக்கா பொறுப்பும் ஒன்றாகச் சேர்ந்து ஒரே அமைச்சரிடத்தில் இருக்கிறதா என்று பார்த்தால், ஒரு மாகாணத்திலும் இல்லை. **(Hear, Hear)** நம்முடைய மாகாணத்தில் லக்ஷ்மியும், சரஸ்வதியும் ஒன்று சேர்ந்து பொருத்தமாக நம்முடைய

6th March 1963] [திரு. டி. வி. தேவராஜ முதலியார்]

அமைச்சரிடத்தில் இருக்கிறது. அதன் காரணமாக இந்த நிதி நிலை அறிக்கை புனிதமாக அமைந்திருக்கிறது என்பதைச் சொல்ல விரும்புகிறேன்.

இந்த நிதிநிலை அறிக்கை, பற்றுக்குறை நிதிநிலை அறிக்கையாக தயாரிக்கப்பட்டிருப்பதைப் பார்த்து வருத்தப்பட வேண்டியிருக்கிறது. புது வரி ஒன்றும் போடாமல் பற்றுக்குறை பட்ஜெட் தயாரித்திருப்பதைப் பார்க்கும்போது, பழியை எல்லாம் மேலிடத்தில் சுமத்திவிட்டு, நாம் பழி இல்லாமல் போய்விடலாம் என்று எல்லா மாநில நிதியமைச்சர்களும் முடிவு செய்து விட்டார்கள் போலத் தோன்றுகிறது. எல்லா நிதியமைச்சர்களும் ஒரு நாள் டில்லிக்குச் சென்றிருக்கிறார்கள். அங்கே கூடி நம் பேரில் பழி வேண்டாம், மத்திய அரசாங்கத்தின் பேரிலே பழியைச் சுமத்திவிடலாம், என்று ஒரு மரத்தை வெட்டி, மற்றொரு மரத்தின் மீது சாத்திவிட்டு வந்து விட்டார்கள். அதனால் இந்த அறிக்கையில் வரி போடுவதற்கு வழியில்லாமல், விட்டு விட்டார்கள் நமது நிதியமைச்சர் என்று இந்த சபையில் சொல்ல முன் வந்தேன். அதைப்போல, இவ்வாண்டு நிதிநிலை அறிக்கையில் பற்றுக்குறை என்பது இல்லாமலிருந்தால்தான் அது அறிக்கை யாகும். நான்கூட கணக்குப் புத்தகம் வைத்துக்கொண்டு, செலவை அதிகமாகக் காண்பித்து, இருப்பு இல்லாமல் கணக்குக் கொடுத்தால் வருமான வரி அதிகாரி ஒத்துக் கொள்ள மாட்டார். இருப்பு இல்லாமல் செலவை அதிகமாகக் காண்பித்திருக்கிறாய்; இருப்பு எங்கே போயிற்று என்று கேட்பார். அதே மாதிரி நிதி நிலை அறிக்கையில் இருப்பு இல்லாமல் விட்டிருப்பது ஒரு குறையாக இருக்கிறது. அதைச் சரிப்படுத்திக் கொடுத்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

இரண்டாவதாக, இந்த ஊர்க்காவல் படையில் மாதர்களை அதிகமாக பங்கெடுத்துக் கொள்ளச் செய்ய வேண்டும். அதிகமான தாய்மார்கள் அந்தப் படையில் இருக்க வேண்டும். அப்போது தான் நாடு முன்னேற முடியும். சேர, சோழ பாண்டிய மன்னர்கள் காலத்தில் பார்த்தால், தாய்மார்கள் வற்புறுத்தி ஒவ்வொரு வீட்டுக்கு ஒரு ஆள் அனுப்பியதாக வரலாற்று ஏடுகளில் காண்கிறோம். அது போல் தாய்மார்கள் வற்புறுத்தி, ஊர்க்காவல் படை இப்படி இருக்க வேண்டும் என்பதைத் தெரிந்து பிள்ளைகளை அனுப்பிவைக்க, அவர்களுக்கு அரசாங்கம் வசதி செய்து கொடுக்க வேண்டும். தாய்மார்கள் பெயரை வைத்துத்தான் எல்லா காரியமும் நடத்திக் கொண்டிருக்கிறோம் என்றால் அது மிகையாகாது. தாய்மார், பெண்பால் பெயர் இல்லாமல் இருக்கலாம் என்று போனால், இதற்கு பெயர் என்னவென்றால் பூமா தேவி என்கிறார்கள். சரி, பூமியில் வேண்டாம், மேலே போகலாம் என்றால் ஆகாஷ்வாணி என்கிறார்கள். பூமியிலும் இருக்க முடியவில்லை, ஆகாயத்திலும் இருக்க முடியவில்லை, தண்ணீரிடம் போகலாம் என்றால், கங்கா தேவி என்கிறார்கள். எல்லாம் பெண் பெயர். எந்த மனிதனுக்

காவது படிப்பு வேண்டுமென்றால், சரஸ்வதி அருள் என்கிறார்கள். பணத்தின் கிட்டே போகலாம், வாழ்க்கை நடத்தலாம் என்றால், லக்ஷ்மி கடாக்ஷம் என்கிறார்கள். இப்படி தாய்மார்களை முன்வைத்துத்தான் நடந்துவந்திருக்கிறோம். எங்கள் அருணாசல புராணத்திலும் 'சக்தியே, சிவமே' என்று தாய்மாரை முன் சொல்லி, பின்னால்தான் நம்மைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். எல்லாவற்றிலும் தாய்மார்கள்தான் முதல் பங்கு பெற்றிருக்கிறார்கள். உணவு உற்பத்தியிலும் கஷ்டப்படுவது தாய்மார்கள்தான். நாமெல்லாம் களைபிடுங்கி வைத்து விடுகின்றோம். தாய்மார்கள்தான் வெய்யலில் காய்ந்து நடுகிறார்கள். வெய்யலில் அவர்கள் முதுகு கிழிந்துவிடுமோ என்று எண்ணக்கூடிய நிலையில் இருக்கிறது. அவர்கள் மனது வைத்தால்தான் முன்னேற்றமடையமுடியும். 'தாய், தந்தை, குரு, தெய்வம்' என்று தான் நம்முடைய முன்னோர்களும் தாய்மாரை முன்வைத்துச் சொல்லியிருக்கிறார்கள். நாடு முன்னேற்றமடைய தாய்மார்கள் ஊர்க்காவல்படையில் இருக்க வேண்டும். தாய்மார்கள் இருந்தால், உண்மையைச் சொல்லி விடுவார்கள். இந்த ஆள் தப்புச் செய்கிறார் என்று பயமில்லாமல் சொல்லிவிடுவார்கள். ஆண்களாகிய நாம் நாலு பேருக்கு பயந்து உண்மையை மறைக்க வேண்டியிருக்கும். ஆனால் அவர்கள் நான்கு பேருக்கு பயந்து மறைக்க மாட்டார்கள். இந்த மாதிரி குற்றம் நடக்கிறது என்று நமக்கு எடுத்துக்காட்டுவார்கள். அப்போது நாம் குற்றத்தை நீக்கி, தவறு செய்கிறவனைத் திருத்தி காரியங்களைச் செவ்வனே செய்ய முடியும். ஆகவே அவர்கள் ஊர்க்காவல் படையில் பங்கெடுத்து நாடு முன்னேற்றமடைய வாய்ப்புத்தரவேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம்.

இந்த வரவு-செலவுத் திட்டத்தில், அரிசனங்கள், தாழ்த்தப்பட்டவர்கள் முன்னேற்றத்திற்கு 3 கோடி ரூபாய் தான் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். அதுபோதாது, இன்னும் அதிகமாக இருந்தால்தான் அவர்களுக்கு வசதி செய்து கொடுக்க முடியும். ஒரு சிலருக்கு மட்டும் வீடுகள் கட்டிக்கொடுத்துவிட்டால், அது மற்ற அரிசன மக்களுக்குப் பொறாமையை உண்டுபண்ணும். 4, 5 வீடுகளை அவர்களில் சிலருக்கு கட்டிக் கொடுத்துவிட்டு, பொறாமையை வளர்த்துக் கொண்டிருக்கிறோம். அவர்களுக்கும், சிலருக்கு முன்னால் கட்டிக் கொடுக்கிறார்கள், நமக்கும் பின்னால் கட்டிக் கொடுப்பார்கள் என்ற எண்ணம் ஏற்படுவதில்லை. ஆகவே தான் சொல்லுகிறேன், இந்த இனத்துக்கு ஒதுக்கியுள்ள தொகை குறைவாக இருக்கிறது; அதை இன்னும் அதிகப்படுத்தியிருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

அடுத்தாற்போல், நான் சொல்ல விரும்புவது, மத்திய அரசாங்கம் அதனுடைய ஊழியர்களின் ஓய்வு பெறும் வயதை 55-லிருந்து 58 ஆக உயர்த்தி இருக்கிறது. நம்முடைய அரசாங்கத்தில் I.A.S., I.P.S., Health Department, Engineering Department, Teachers இவற்றிலுள்ள Technical அலுவலர்கள் மட்டும் 58 வயது வரையில் வேலையிலிருக்கலாம் என்றிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அந்த மாதிரி இல்லாமல் எல்லோருக்கும் ஓய்வு

6th March 1963] [திரு. டி. வி. தேவராஜ முதலியார்]

பெறும் வயது 58 என்று நிர்ணயித்து, மத்திய அரசாங்கத்தில் எப்படி இருக்கிறதோ அப்படிச் செய்தால் நன்றாக இருக்கும். அப்படிச் செய்தால், இந்த நெருக்கடியான சமயத்தில் அவர்கள் ரிடையர் ஆவதால் அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய Provident Fund தொகையாகிய 15,000 ரூபாய், 20 ஆயிரம் ரூபாய் அளவுக்கு உள்ள பெருந் தொகையை இப்போது கொடுக்க வேண்டியிருக்காது. இரண்டாவது அரை பென்ஷன் சம்பளம் மிச்சமாகிறது. அரசாங்கத்துக்குத் தெரியாததை நான் சொல்ல வில்லை கீழே உள்ள ஊழியர்கள், மேலே இருப்பவர்கள் 55 வயதில் ஓய்வு பெற்றால், நாம் முன்னுக்கு வர முடியும் என்று நினைக்கலாம். அவர்களுக்கு மன ஆறுதல் சொல்ல வேண்டியிருக்கிறது. பின்னால் தங்களுக்கும் ஓய்வு வயது 58 ஆக இருக்கும் என்பதை அவர்கள் நினைத்துப் பார்த்தால் நன்றாக இருக்கும், என்பது என்னுடைய ஆசை. ஆகவே எல்லா ஊழியர்களுக்கும் ஓய்வு வயது 58 என்று ஆக்க வேண்டுமென்று அமைச்சரவர்களைத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்ததாக, மத்திய அரசாங்கம் மண்ணெண்ணெ மீது புதிதாகப் போட்டிருக்கும் வரியால், நம்முடைய மாகாணத்தில் புட்டி ஒன்றுக்கு இரண்டணா சென்னையில் விலை ஏறியிருக்கிறது. சென்னை பூராவும் மண்ணெண்ணெ அடுப்புத்தான் உபயோகிக்கிறார்கள். 45 ரூபாய் கொடுத்து நான்கூட வாங்கிவிட்டேன். இன்றைக்கு பத்திரிக்கையைப் பார்த்தால், சென்னையில் மண்ணெண்ணெ விலை ஏறியிருக்கிறது; பம்பாயில் போனமாதம் விற்ற விலையிலேயே விற்கிறார்கள் என்று தகவல் போடப்பட்டிருக்கிறது. கிராமங்களில் மண்ணெண்ணெ விளக்குதான் எரிகிறது. இந்த விலை உயர்வானது கிராம மக்களை, ஏழைகளை மிகவும் பாதிக்கிறது. ஆதலால் அமைச்சரவர்கள் இதை மத்திய அரசாங்கத்துக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். நேற்று திரு. O. P. ராமசாமி ரெட்டியார் தெரிவித்ததுபோல :

"இடிப்பாரை இல்லா ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்"

எடுத்துச் சொல்லுகிறவர்கள் இல்லை என்றால், கெடுக்கக்கூடியவர்கள் இல்லாவிட்டாலும் தானே கெட்டு விடுவான் என்பது திருவள்ளுவர் வாக்கியம். ஆகவே எடுத்துச் சொல்ல வேண்டியது அவசியம். நமது சர்க்கார் மத்திய சர்க்காருக்கு எடுத்துச் சொல்லி, இந்த மண்ணெண்ணெக்குப் போட்டிருக்கும் வரியைக் குறைக்கவேண்டுமென்று நான் பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன். ஏழைமக்களுக்கு அது உதவிகரமாக இருக்கும் என்பதால், அதைச் செய்ய நமது அமைச்சர் உடனடியாக முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, எனக்கு இந்த சந்தர்ப்பத்தை அளித்த தலைவரவர்களுக்கு நன்றி தெரிவித்து முடிக்கிறேன்.

MR. CHAIRMAN : The House will now adjourn and meet again at 3 p.m. to-morrow.

The House then adjourned.